உ
சிவமயம்
திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 18 || பிலவங்க ஷு புரட்டாசித் திங்கள் 1ம்உ [17–9–67] || இதழ் 9

# நீதிநெறி விளக்கம்

( கட்டுரை 13 )

தொண்டைமண்டலாதீனம் மகாசந்நிதானம்
சீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் அவர்கள்
ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் மடாலயம்,
காஞ்சிபுரம்.



கற்றோர்க்குக் கல்வி நலனே கலன் அல்லால்
மற்றோர் அணிகலம் வேண்டாவா — முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக் கழகுசெய் வார்.

கற்றோர்க்குக் கல்வி நலனே கலன் எனக் கற்றோர்க்குச் சொல்லியது இதில். வடமொழியிற் பொதுவாகப் புருடனுக்கு வித்தையே பூடணம் "வித்யைவ பூஷணம் பும்ஸாம்" என்று.

மற்றோர் அணிகலம் வேண்டாவாம் என்றது "வாண்யே நாஸ மலங்கரோதி புருஷம் யாஸம்ஸ்க்ருதா தார்யதே,க்ஷியந்தே கலு பூஷணநி ஸததம் வாக்பூஷணம் பூஷணம்." என்றதோடு ஒருங் குற்று நோக்கத் தக்கது. இவற்றிற் பொதுவும் சிறப்புமாம் வேறுபாடும் அறியற்பாலது. "கேயூராணி நபூஷயந்தி புருஷம் ஹாராந சந்த்ரோஜ்வலா: நஸ்நாநம் நவிலேபநம் ந குஸுமம் நாலங்க்ருதா மூர்த்தஜா:" என்பதும் இங்கு ஒப்புநோக்கற் குரியது.

"குஞ்சியழகும் கொடுந்தானை கோட்டழகும்
மஞ்சளழகும் அழகல்ல — நெஞ்சத்து
நல்லம்யாம என்னும் நடுவு நிலைமையாற்
கல்வி யழகே அழகு."

என்ற நாலடிப் பாடலின் ஈற்றடியின் அமைப்பே இந் நீதிநெறி விளக்கத்தின் முதலடியில், 'கல்வி நலனே கலன்' என்னும் சொற்றொடரமைப்பாகும். ஆதலின், 'நலனே' என்றதன் பொருளாக 'அறிவே' என்று எழுதியிருப்பது எப்படிச் சிறக்கும்? அறிவு முதலிய பலவும் உணர்த்தி நிற்பது 'கல்வி' என்பது. 'கல்வி நலனே' என்பது 'கல்வியழகே' என்னும் பொருள் குறித்து நிற்பதே அன்றிக் கல்வியறிவே என்னும் பொருள் குறித்து நிற்பது அன்று. அப்பொருளை ஈண்டுக் கொள்ளக் கருத்துச் செலவும் இடங் கொடாது. ஆசிரியர் 'கற்றோர்க்குக் கல்வியறிவே கலன்' எனக் கருதியிருப்பாரேல், மற்றோரணி கலம் எனல் எவ்வாறு இயையும்? இயற்கையறிவு செயற்கை யால் உறுங் கல்வியறிவு இரண்டனுள் ஒன்றனைக் கலனாக்கிப் பிறிதைக் கலனாகாதென்று விலக்கக் கருதி, கல்வியறிவே கலன் அல்லால் மற்றோர் அறிவு (இயற்கையறிவு) வேண்டாத தாம் எனல் பொருந்தும்.

அப்படி இப்பாட்டின் கருத்துச் செல்கை இல்லை. கல்வி யழகே கலன். வேறு கலன் வேண்டா என்பதே இதிலுற்ற கருத்தியல்வு. அணிகலன் எல்லாம் அழகுதரற்பொருளவாய் அணியப்படுவன. சிறப்புத்தொழிலாகச் சொல்லப்படும் பூட்டல், முடித்தல் முதலனவும் அப்பொருளனவே. அழகுதாராதன அணி யப்படா, எக்காரணத்தால் அணியப்படினும் அக்காரணம் அணி

யாகக் கொள்ளப்படும். அணியாக் கொள்ளப்படாதன அழகாக் கொள்ளப்படுதல் இக்காலத்தும் உண்டு. கதர்நூல், கதராடை, கைத்தறியாடை முதலியவற்றை அணியாகக் கொள்வாருளரோ? மாலையழகும் அதை மேலைக்கொள்ளும் அழகும் ஒன்ருக் கொள்ளல் உண்டன்றே?

நாலடிப்பாடலில், குஞ்சி அழகும் அழகன்று. கொடுந் தானைக் கோட்டழகும் அழகன்று. மஞ்சளழகும் அழகன்று. கல்வியழகே அழகு. ஏன்? 'நல்லம்யாம்' என்னும் நடுவுநிலைமையை நெஞ்சத்து உணர்கின்றமையால் என்று இயன்ற கருத்துப் பொருத்தம் இனிது விளங்கும். அவ்வாறே இந் நீதி நெறிவிளக்கப்பாடலில்,

(கற்ருேர்க்குக்) 'கல்வி நலனே கலன்' என்னும் முடிவைத் தலைப்பிற்குறித்து, மற்றைக் கலன் எல்லாம் கற்ருேர்க்குக் கலனுக வேண்டாதன என்று அதற்குரிய ஏதுவைக் கூறுமுன், விலக்கலுற்ருர் ஆசிரியர். நாலடிப்பாட்டில், தலைப்பில் அழக லாதனவற்றை விலக்கலும், இடையில் ஏதுவும், கடையில் முடிவும் அமைந்தன. இந்நீதிநெறிவிளக்கப்பாடலில் தலைப்பில் முடிவும் இடையில் விலக்கலும், கடையில், 'முற்றமுழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா' மையாலும், அழதக்கு அழகு செய்வார் ஆருமில்லாமையாலும் (மற்ருேர் அணிகலம் வேண்டாவாம்) என்று முடித்தார். தனிச்சீர் முதலாகிய பகுதி முழுதும் உலகியலை யொட்டியுணர்த்தும் ஏதுவே ஆயினும் அவ்விரண்டனையும் ஏதுவாக்கியமாக அமைத்திலை.

'கற்ருேர்க்கு' என்று வெளிப்படையாகக் கூறியவாறே நாலடிப்பாடலில் வெளிப்படையாகக் கூறப்படவில்லை எனக் கருதலாம். அப்படிக் கருதற்கு இடம் இல்லை. குஞ்சி, கொடுந் தானை, மஞ்சள், நெஞ்சம், நடுவுநிலைமை, கல்வி என்னும் எல்லாப்பெயராலும் 'யாம் நல்லம்' என்னும் தொடராலும் கற்ருேர் என்பது வெளிப்படுவது. அது குறிப்பாகாது.

'கல்வி நலனே' என்றதன பொருள் 'கல்வியழகே' என்பது தான். 'கல்வியழகு' எனனுந் தொகை நிலைத்தொடர் எவ்வாறு விரித்துரைக்கப்படும்? 'இருசெவி' எனனும் பண்புததொகை நிலைத்தொடர். சிவஞான சிததிக்காப்புச் செய்யுளுரை விசேடத்

திலே 'இரண்டு முறம்போலுஞ்செவி' என விரித்துரைக்கப்பட்டுளது. "இருசெவியன் என்றது இசையெச்சத்தால் இரண்டு முறம்போலும் செவியன் எனப் பொருள்தந்து நிற்றலின், ஒரு கோடு முதலியன போலப் பிறிதினியைபு நீக்கிய விசேடணம் ஆதற்கு இழுக்கின்மையுணர்க," என்பது அவ் விசேடவுரை வாக்கியம். இசையெச்சம் எங்கு எவ்வாறு கொள்ளப்படுவது? 'இருமுறம்' என்றதற்கு இடையில் இசையெச்சம் உறுமோ? இருசெவி என்பதும் 'முக்கண்' என்பதும் அளவைப்பண்புத்தொகை நிலைத்தொடரே. தொல்காப்பிய விதிப்படி பண்புத்தொகைச்சொற்களைப் பிரித்தல் கூடாது.

"உயர்திணை அஃறிணை யாயிரு மருங்கின்
ஐம்பா லறியும பண்புதொகு மொழியும்
செய்யும் செய்த என்னுங் கிளவியின்
மெய்யொருங் கியலும் தொழில்தொகு மொழியும்
............................ மருவின் பாத்திய
புணரியல் நிலையிடை யுணரத் தோன்ரு."

என்பது தொல்காப்பியத் தெழுத்ததிகாரத் தீற்றயனூற்பாவின் பகுதி. இளம்பூரணரும் நச்சினர்க்கினியரும் தம்முரைக்கண் இதற்கு நன்கு விளக்கம் எழுதினர். நன்னூலார் இதனின் வேறு கூறினர். எப்படியிருப்பினும், கல்வி நலன்—கல்வியழகு என்னுந் தொடர் 'கல்வியாகிய அழகு' என விரிக்கப்படாது. மயிலாட்டு, குயிற்பாட்டு என்பன மயிலினது ஆட்டு, குயிலினது பாட்டு என விரிக்கப்படும். மயிலாகிய ஆட்டு, குயிலாகிய பாட்டு என விரிககப்படுமோ? கல்வியழகு என்பது கல்வியினது அழகு என விரிக்கப்படும். அது கல்வியாற் கற்ருேனுக்கு எய்தும் அழகு எனக்குறித்துநிற்பின், கல்வியாலாகுமழகு என விரிக்கப்படும். 'கல்வியழகே அழகு' என்னுங்கால், குஞ்சி, தானைக்கோடு, மஞ்சள் முதலியவற்ருல் எய்தும் அழகு அழகல்ல. கல்வியான் எய்தும் அழகே அழகு எனப் பொருள் பயத்தல் அறிக. 'கற்ருேர்க்குக் கல்விநலன்' என்றதில், கற்றவர்க்குக் கல்வியால் எய்தும் நலன் என்றலே தக்கது. கற்ருேர்க்குக் கல்வியாகிய அழகு எனல் தக்கதன்று. கல்வி அழகாகாது. அழகு கல்வியாகாது. கல்வியே அழகாயின், அழ

குள்ள இடம் எல்லாம் கல்வியும் கல்வியுள்ள இடமெல்லாம் கல்வியும் கொள்ளப்படும்.

'கல்விநலனே கலன்' என்றதன் தாற்பரியம் யாது? கல்வி நலன் கலன் ஆகாது. கலன் கல்வி நலன் ஆகாது. கல்வியால் எய்தும் அழகும் கலனால் எய்தும் அழகும் வேறல்ல; கல்வியால் அழகெய்தியவன் கலனால் அழகெய்துவது வேண்டாதது. கலனாலும் எய்தற்பாலதாய அழகு வேண்டுவதாயின், அவ்வழகையுறுத்த மற்றோரணிகலம் வேண்டும். கல்வியால் எய்தும் அழகே முற்றும். கலனால் எய்தும் அழகு கூடினாற்றான் கற்றோனுக்கு அழகு முற்றும் எனல் இல்லை. கல்வியழகுடைமை முற்றுப் பெற்றது. அது சிறிதும் அழகிற் குறைவுடையது அன்று. முற்றமுழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா. ஆர் அழகுக்கு அழகு செய்வார்? குறைவுடையதாயின் நிறைவு செய்யப் பிறிது வேண்டும். கல்வியழகே முற்றியது.மற்றொன்று சார்ந்து அழகை நிறைவு செய்யும் இன்றியமையாமை கற்றோனுக்கு இல்லை. முற்றமுழுப்பூண் கற்றோனுக்கு ஒப்பு. அதற்கு மற்றொருபூண் வேண்டாமைக்குக், கற்றோனுக்கு மற்றோரணி கலம் வேண்டாமை ஒப்பு. கல்வியழகே அழகு. அவ்வழகுக்கு வேறு அழகு செய்ய வேண்டா. அழகுக்கு அழகு செய்வார் யாரே? அணிதல் – அழகுசெய்தல். அணிகலம் – அழகு செய்யும் ஆபரணம். அணிசெய்யப் பல தொழில் நிகழும். பூணல் பூட்டல், கவிதல் – கவித்தல், முடிதல் – முடித்தல் முதலிய தன்வினை பிறவினைக்கு அணிதலே அடியாம். பூட்டுவன, கவிப்பன, முடிப்பன முதலிய யாவும் அணிவனவே. அணிகலம் என்பதில் அவை எல்லாம் பொதுவில் அடங்கும். "அணியென்பது கவிப்பன கட்டுவன இடுவன தொடுவனவற்றிற்கெல்லாம் பொதுச் சொல் ஆதலின், அதனை அணிந்தார் தாங்கினார் என்க" என்றார் சங்கரநமச்சிவாயர். (நன்னூல் 389 உரை) தாங்கினார் என்பது அணிந்தார் என்னும் பொருளதன்று பொதுச்சொல் என்பதாக மட்டும் அது கொள்ளப்பட்டது. சேனாவரையத்தில் "அணியென்பது கவிப்பன கட்டுவன செறிப்பன பூண்பன என்னுந் தொடக்கத்தவைற்றிற்கும் பொது." என்றதையும் நோக்குக (46). அணிகவித்தார் அணிபூண்டார் எனல் வழு என்றும் உரைத்தார் அவர். அதனால் 'அணிகலம்' என்றது பொது,

ஆபரணம் எல்லாம் அதனுற் கொள்ளப்படும். அவற்றுள் கல்வி யழகு போல அழகு செய்வது யாதொன்றுமில்லை. யார்க்கு? கற்ருேர்க்கு, மற்ருேர்க்கு அணிகலமே அழகுசெய்யத் தேவை யாகலாம். கற்ருேர்க்கு மற்ருேரணிகலம் வேண்டாவாம். அவர்க்கு அவர் கற்ற கல்வியால் எய்தும் அழகே கலனுகும். இக்காலத்தில் அது கலனுய் விட்டது. இதன் பொருளை உலகவழக் கிற் காண்க.

> "மயிர்வனப்பும் கண்கவரும் மார்பின் வனப்பும்
> உகிர்வனப்பும் காதின் வனப்பும் — செயிர்தீர்ந்த
> பல்லின் வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த
> சொல்லின் வனப்பே வனப்பு." (சிறுபஞ்சமூலம் 35)

இப்பாட்டிற் குறிக்கப்படாதனவும் கூறிக் கொள்ளப்படும் இவையே அழகுறுத்துவன. பிற அன்ன அல்ல எனக் கொள் ளல் வேண்டா. இக்கொள்கையை ஏலாதி வெண்பா உணர்த்து வதுணர்க. அதிற் கூறுவன இதிற் கூறப்படாதனவே.

> "இடைவனப்பும் தோள்வனப்பும் ஈடின்வனப்பும்
> நடைவனப்பும் நாணின்வனப்பும் புடைசால்
> கழுத்தின் வனப்பும் வனப்பல்ல எண்ணோ
> டெழுத்தின் வனப்பே வனப்பு." (74)

ஈடு - இடுவனவாய ஆபரணம். முற்பாட்டில் 'நூற்கியைந்த சொல்லின் வனப்பே வனப்பு' என்றதும், இப்பாட்டில், 'எண் ணோடு எழுத்தின் வனப்பே வனப்பு' என்றதும், நாலடியிலும் நீதிநெறிவிளக்கத்திலும் முறையே 'கல்வியழகே அழகு' 'கல்வி நலனே கலன்' என்றமையும் வெவ்வேறே ஆயினும் அவை யெல்லாம் கருத்தால் இந் நீதிநெறிவிளக்கத்தின் உட்கோளை உணர்த்துவனவே. பின்னிரண்டும் கல்வி என்னும் பொதுமை யும் முன்னிரண்டும் 'நூற்கு இயைந்த சொல்லும், 'எண்ணும் எழுத்தும்' ஆகிய அக்கல்வியின் உட்பிரிவாகிய சிறப்பும் ஆதல் அறிக. நூற்கியைந்த சொல் பல கருத்திற்கு இடந்தரும்.

'கல்வி' என்றதற்குக் 'கற்றல்' என்றுரைத்ததும் பொருந் தாது. 'மடங்கொன்றறிவகற்றுங் கல்வி' 'கல்வியே கற்று டைப்பெண்டிர்' 'கல்விபயக்கும்-நாட்டும்-கைகொடுக்கும் துணை' 'இலம் பாட்டார்கல்வி' 'கற்பன்றே கல்லாமையன்று' 'கல்வி

யுடைமை பொருளுடைமை' என்னுமிடங்களிற் போல ஈண்டும் நின்றதால், கற்றல் என்றது எப்படிப் பொருந்தும். தூங்கல், தூக்கம், நோக்கல், நோக்கம், அடங்கல், அடக்கம், கொள்ளல், கொள்கை, புலத்தல், புலவி, கலத்தல் கலவி, முதலியவற்றைப் போலக் கற்றலும் கல்வியும் ஒருபொருளன அல்ல. அவற்றை ஆங்காங்கு ஆள்வோர் கருத்துணர்ந்து பொருளுரைத்தல் வேண்டும். ஈங்குக் கல்வி என்னும் சொல்லைக் கற்றல் என்னும் பொருளில் ஆசிரியர் ஆண்டாரல்லர்.

கலன், நலன் என்பனவே கலம் நலம் என்று வழங்குகின்றன. அவற்றை மாருக் கொள்ளலாகாது. ஒற்ருல் அவை னவ்வீற்றுச் சொல்லே. மவ்வீற்றுச்சொல்லாகாதனவும் இருக்கின்றன. னவ்வொற்றுள்ள இடத்தை மவ்வொற்றுப் பற்றுவதாகவே தொல்காப்பியர் குறித்தார். அதை மாருக் கொள்ள அவர் குறிப்பு இடங்கொடாது.

"மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த
னகரத் தொடர்மொழி ஒன்ப∴ தென்ப
புகரறக் கிளந்த அ∴றிணை மேன."

என்பது அத்தொல்காப்பியச் சூத்திரம். இதிலே 'தொடர்மொழி' என்றதால் ஈரெழுத்தினும் மிக்க சொல்லே கொள்ளப்படும். நலன் (நலம்) முதலியன மூவெழுத்துச் சொல்லே. (தொடர் மொழியே). மகரத் தொடர்மொழி எனின் 'நலம்' என்பது போலும் பெயர்ச்சொல் என்றபடி. அத்தொடர்மொழி மயங்குதல் எனின் நலன் என்ருதல். அம் மயங்குதல் வரைதல் என்ருல், நலம் என்பது நலன் என்று மயங்குதல் போல மயங்குதலை நீத்தல் என்ருகும், வரைந்த னகரத் தொடர்மொழி என்ருல் அவ்வாறு நீக்கிய னவ்வீற்றுப் பெயர் என்றவாறு நலன் நலம், பொலன் பொலம், திறன் திறம் என்பனவும் அவை போல்வனவும் மகரத்தொடர் மொழி மயங்குதலை வரையாத னகரத் தொடர்மொழி. மயங்குதல் மகரத் தொடர்மொழியின் வினை. வரைதல் னகரத்தொடர் மொழியின்வினை. மரன்–மரம். நிலன்–நிலம் என்பனவும் அவைபோல்வனவும் இதற்கு எடுத்துக்காட்டாகும். இவ்வாருகாதன ஒன்பதுசொல் என்ருர் தொல்காப்பியர். அவை இவை எனத் திட்டமாக உரையாசிரி

யராற் காட்டப்படவில்லை. ஈங்கு 'மகரத்திற்கு னகரம் போலி யாகி நின்றது' என்றெழுதியது நன்னூற் சூத்திரம் பற்றிய பிழை வழக்கு. அஃது இத்தொல்காப்பியச் சூத்திரத்திற்கு மாறுயதே.

முற்ற—எக்காலத்திலும் என்றுரைத்தார் ஒருவர். முற்ற முழுக்க, முற்றமுடிய, முழுக்கமுழுக்க என்னும் வழக்குணர்க.

முழுமணி-முழுமாணிக்கம் (நச்சிஞர்க்கினியர்). மற்ருேர்—(கற்ருேரல்லாத) மற்றவர் ஆகிய செல்வர். மற்ருேரணிகலம்—செல்வர்க்குரிய அணிகலம் என்ருருமுளர். 'அரசர்க்குரித்தருங் கலம்',

'பொன்னணியும் வேந்தர் புனையாப் பெருங்கல்வி
மன்னும் அறிஞரைத்தாம் மற்றெவ்வார் — மின்னுமணி
பூணும் பிறவுறுப்புப் பொன்னே யதுபுனையாக்
காணுங்கண் ஒக்குமோ காண்'

என்பது இங்குக்கருதற்பாலது. உவமையால் கற்ருேர் கண்ணு வார். மற்ருேர் கண்ணல்லாப் பிறவுறுப்பாவார். மற்றை யுறுப்புக்கள் அணிகலம் வேண்டுவன. கண்கள் அணிகலம் வேண்டாதன. அவ்வாறே, மற்றையோர்க்கு அணிகலம் வேண்டும், கற்ருேர்க்குக் கல்விநலனே கலன், மற்ருேரணிகலம் வேண்டாவாம். மற்ருேரணிகலம் (அழகு) முற்ற வேண்டாவாம் என்றலும் உண்டு.

வேண்டாவாம் முற்ற முழுமணிப்பூண் என்றும், வேண் டாவாம் உற்ற முழுமணிப்பூண் என்றும் பிரித்துரைத்தல் பெ..ருந் துவதே. முழுமணி-மாணிக்கரத்நம். முழுமணிப்பூண்—அந்தரத் நத்தைப்பதித்த பூண். யாரே-ஒருவருமிலர். உற்ற முழுமணி. முழுமணியுற்ற என்ருரும் உளர்.

அழகுக்கு அழகு செய்தல் இல்லை என்பதைக் கம்பர் மறுத்துவிட்டார். அவர் பற்பல உலக வழக்கிற்கு மாருகத், தோற்றியும் மாற்றியும் சாதுரியம் உறப் பாடும் வல்லமம் வாய்ந்த பெரும் பாவலர் கோமகனுர். கவிச்சக்கிரவர்த்தி என இருவரே அக்காலத்தில் விளங்கினர். பண்புத்தொகையை யறியாவினைத்தொகையும் அப்புகழ் பெற்றது.

மக்கள் அழகைப்பெற முயறல்தகும். அழகு மக்களை யுறத்தவஞ் செய்தல் உண்டோ? அழகு தனக்கு அழ குண்டாக வேண்டித் தக்கதோரிடத்தை நாடித் தவஞ் செய்ததாம். அழ குண்டாதற்குரிய வழிகள் பலபல உள. அவற்றுள் ஒன்று அதற்குத் தக்க இடத்தில் இருப்பதும் ஆ(அழகா)ம். அவ்வழகு பெறவேண்டிச் சீதையினிடத்தில் தானிருப்பதே தனக்கு அழ குறுத்தும் என்று, அழகு அச்சீதையைப் பெறத்தவஞ் செய்த தாம். அவையஞ்சி மெய்விதிர்ப்பாரிடத்திற் கல்வியிருப்பது அழகாமோ? அவையஞ்சாது பேசும் நல்லாற்றல் கல்லாரிடத் திருப்பதழகோ? ஈத்துண்ணுப் பாவிகளிடத்திலே செல்வம் குவிவது அழகாமோ? வறிஞன் மனைவிக்கு ஈகைப்பண்பு என்ன அழகு செய்யும்? கல்வி, சபையலங்காரம் புரியும் சதுரப்பாடு டைய பிரசங்கசக்தி, செல்வம், ஈகைக்குணம் முதலிய யாவும் இருக்கத்தக்க இடத்தில் இருந்தாற்றான் அழகு, மதிப்பு முதலிய வற்றை விளைக்கும். தகாத இடத்தில் இருந்தாற் பயனில்லை. அழகும் தனக்கு அழகு முதலியன உளவாகச் சீதையினிடத்தில் இருப்பதே தகும் என்று கொண்டு, தவம்புரிந்து சீதையை பெற்றதாம்.

"குணங்களை என் கூறுவது? கொம்பினைச் சேர்ந்தவை உய்யப் பிணங்குவன அழகு இவளைத் தவஞ்செய்து பெற்றது காண்."

"அமிழ்தினைச் சுவைசெய்தென்ன அழகினுக் கழகுசெய்தார்
இமிழ்திரைப் பரவைஞாலம் ஏழைமை யுடைத்துமாதோ."

என்பது கம்பரது கவிக்கொடைப்பொருள். ஏழைமை தீர்ப்பது கொடையன்றோ?

'யாரே அழகுக்குஅழகு செய்வார்' என்றதால் அழகெலாம் ஒருங்கே காணும் இடம் கற்றோரிடம் என்று விளங்கிற்று. அழகு நிறைவுடையதால் மற்றோரணிகலம்வேண்டாததாயிற்று. ஆகவே "அழகெலாம் ஒருங்கே கண்டால் யாவரே ஆற்றவல்லார்" என்னும் கம்பரது வினு மற்றவர்க்குக் கற்றவரைக் குறித்தும் உற்றதாதலும் பொருந்தும்.

அபிராமன் பேரழகன். அவனுக்குச் சீதை ஆபரணமாம். அஃது அழகுக்கு அழகு செய்வதன்றோ? அந் நன்மகனுக்கு 'இவள் நல்லணி' யாம், (கடிமணப்படலம் 96). இங்குச் சீதையை

நல்லணி என்றார். இச் சீதையின் தோற்றத்தால் "அழகெனும் அதுவும் ஓர் அழகு பெற்றதே" என்றார் கம்பர்.

சித்திரகூடத்திலே இலக்குவன் தழைக்குடில் அமைத்த காலையிலே,

"மேவு கானம் மிதிலையர் கோன்மகள்
பூவின் மெல்லிய பாதமும் போந்தன
தாவில் எம்பிகை சாலை சமைத்தன
யாவை யாதும் இலார்க்கியை யாதவே"

என்ற பாட்டில், 'மொட்டை மரத்தால் என்ன பயன்' வறுமை யுடையவன் என்ன செய்ய முடியும்? ஏழைகளால் யாது முடிக்கக் கூடும்? என்று பலபடப்பேசும் உலக வசனத்திற்கு மாறாக, ஒன்றுமில்லாதார்க்கு எவை முடியாதன? எல்லாம் அவராற் செய்து முடிக்கக்கூடும் என்று நிலைநாட்டும் கம்பர் திறத்தை யாரே அளவிடவல்லார்? தம்பியின் கைகள் பர்ண சாலையைச் சமைத்தன. அக்கையிலோ இலக்குவன்பாலோ சாலை கட்டச் சாதனம் என்ன இருந்தன? நடக்க முடியாத கால்களும் நடக்க முடிந்தன. கட்ட முடியாத கையால் சாலையும் கட்டி முடிந்தது. கானம் போகவும், சாலை சமைக்கவும், யாதும் சாதனமில்லை. இல்லார், உடையாரைப் போல எல்லாம் செய்வது உலகியலன்று. அஃது உலகியலே என்று சாதித்தார் பொருத்தமான இடம் பார்த்துக் கம்பர். அநுமன் வாக்கிலே,

"குராவருங்குழலியைக் குறித்த நாளினே
விராவரும் நெடுஞ்சிறை மீட்கிலான் எனின்,"

என்று ஒன்று தோற்றிவிட்டு,

"பராவரும் பழியொடும் பாவம் பற்றுதற்கு
இராவணன் அவன் இவன் இராமன் என்றனன்."

எனக் கம்பர் இராமனை இராவணனாகவும் இராவணனை இராமனாகவும் நிறுத்திக் காட்டியவாறு யாவர் காட்டவல்லார்? மகா கவிச் சக்கிரவர்த்தியால் ஆகாதனவும் உளவோ?

ஒருத்தி தாலியையிழந்தாளாயின், எல்லா அணிகளையும் இழந்துபோதல் உலகியல். சுமங்கலியாயுள்ள வரையில் தாலியே மற்றை ஆபரணங்களை யெல்லாம் காத்து வருகின்றது.

அமங்கலியாய்விட்டால், காப்பதும்போய்க் காக்கப்படுவனவும் போய்விடுகின்றன. அதனுல் தாலியை மற்றவை காப்பன அல்ல என்பது தெரிந்ததே. கம்பர், இதை மாற்றிச் சொல்லின் செல்வனது செல்லுஞ் சொல்லாக வைத்து,

"கொற்றவற்காண்டுக் காட்டிக் கொடுத்தபோ தடுத்த தன்மை
பெற்றியின் உணர்தற்பாற்ருே உயிர்நிலை பிறிதும் உண்டோ?
இற்றைநாள் அளவும் அன்ன! அன்று நீ இழித்து நீத்த
மற்றைநல் லணிகள்காண் உன்மங்கலம் காத்தமன்னே."

என்று தாலியை மற்றைய நல்லணிகள் காத்த உண்மையைப் பொருத்தமாக அமைத்த திறம எக்கதையில் எக்கவிக்கு எப்படி வாய்க்கும்! இங்குச் சீதையின் அணிகளை நல்லணி என்ருர். முன்னர் இராமபிரானுக்குச் சீதையே நல்லணியாம் எனருர்.

நல்லார் எல்லாரும் தவஞ்செய்ய முயல்வர். தவம் தவம் செய்யுமோ? சீதையைக் குறித்து,

"வேலையுள் இலங்கை என்னும் விரிநகர் ஒருசார் விண்தோய்
காலையும் மாலை தானும் இல்லதோர் கனகக் கற்பச்
சோலையங் கதனின் நும்பி புல்லினுல் தொடுத்த தூய
சாலையின் இருந்தாள் ஐய தவம் செய்த தவமாம் தையல்"

என்று தவமே தவஞ் செய்ததாகவும் முன்னர் அழகு தவஞ் செய்ததாகவும் கூறிய ஈரிடத்தையும் ஒருசேரக் கருதின், சீதையை 'நற்பெருந் தவத்தளாய நங்கை' 'தேவியுள்ளத் தருந்தவம்' 'ஒருவர்தரம் அடங்குவதன்று இது தவஞ்செய்ததவம்' 'பெருந்தேவிதவத் தொழில்' என்று குறித்த அத்துணையும் (முற்றும்) உண்மை யுரையே எனல் சொல்லவும் வேண்டுமோ? அத்தவத்தாலே அழகு தவம் செய்து பெற்றது என்பது வாயுரையே. அழகுக்கு அழகு செய்தவாறும் உண்டென்ற சாதுரியத்தை வேறு யாண்டும் காண்டலரிது. கம்பர் கவியுள் பிறவற்றில் காணுத நலமெல் லாம் காணலாம்.

கல்விநலன்:- தீங்கவி செய்திறன், சொல்வளம், மாணவை மண்ணுறுத்துஞ்செல்வம், இடமறிந்து உய்த்துணர்வு, சொல் வன்மை முதலியவை.

(தொடரும்)

# மணிமொழி விளக்கம்

சித்தாந்தக் கலைமணி, மகா வித்துவான்,
திரு. சி. அருணை வடிவேல் முதலியார் அவர்கள்,
தருமையாதீனப் பல்கலைக்கல்லூரி பேராசிரியர், தருமபுரம்.

## திருவம்மானை
## 2 – ம் திருப்பாட்டு
### " பாரார் விசும்புள்ளார் "

முன்னவள் திறம்பட எறிந்த அம்மனையை ஏனைய மகளிர் கூட்டத்தில் திறமைமிக்க ஒருத்தி தன்கையில் பிடித்து மீண்டு எறியத் தொடங்கினாள். அங்ஙனம் தொடங்குகின்ற அவள் இறைவனைப் பின்வருமாறு பாடுகின்றாள் :—

பாரார் விசும்புள்ளார் பாதாளத் தார்புறத்தார்
ஆராலும் காண்டற்கரியான்; எமக்கெளிய
பேராளன்; தென்னன் பெருந்துறையான்; பிச்சேற்றி
வாரா வழியருளி வந்தென் உளம்புகுந்த
ஆரா அமுதாய் அலைகடல்வாய் மீன்விசிறும்
பேரரசை வாரியனைப் பாடுதுங்காண் அம்மானாய்!

உயர்ந்த பொருள் கிடைத்தற்கு அரிதாய் இருத்தலும், தாழ்ந்த பொருள் கிடைத்தற்கு எளிதாய் இருத்தலும் இயல்பு. இறைவன் எல்லாப் பொருளிலும் மிக உயர்ந்த பொருள். அதனால் "பரமன்" எனக்கூறப்படுகின்றான். அவனோடு இணையாக மற்றொரு பொருள் இல்லாமை பற்றி இறைவனை, "தனக்குவமை இல்லாதான்" என்று கூறுகின்றார் திருவள்ளுவர். ஆகவே, இறைவனிடத்து உள்ள அன்பால் அவனைப் புகழ்கின்றவள்,

---

தருமையாதீனப் பல்கலைக்கல்லூரி பேராசிரியர், சித்தாந்தக் கலைமணி, மகா வித்துவான், திரு. சி. அருணை வடிவேல் முதலியார் அவர்கள், நம் வேண்டுகோளுக்கிணங்கி திருவாசக உரை 'குமரகுருபரனுக்கு'த் தொடர்ந்து உதவ இணங்கியுள்ளார்கள்.

"எம்பெருமான் எத்தகையோராலும் காணுதற்கு அரியவன்" என்றற்கு, "ஆராலும் காண்டற்கு அரியான்" என்ருள்.

ஆராலும் (யாராலும்) என்பது, எத்துணைச் சிறப்புடையோ ராலும் எனப்பொருள் தரும். எத்துணைச் சிறப்புடையோராலும் என்ருல் "அவர் யாவர் என்னும் விஞவிற்கு விடையாக "பாரார் விசும்புள்ளார் பாதாளத்தார் புறத்தார்" என்ருள். பாரார்-பூமியில் உள்ளவர்; மக்கள். விசும்புள்ளார்-விண்ணில் உள்ளவர்; தேவர். பாதாளத்தார்-கீழ் உலகில் உள்ளவர், நாகர். இவரெல்லாம் இவ்வண்டத்திலே உள்ளவர்கள். நாம் வாழ்கின்ற இவ்வண் டத்தைப்போல மற்றும் அண்டங்கள் எத்துணையோ கோடானு கோடியாக உள்ளன. அவ்வண்டங்களிலும், பல்வேறு வகைப் பட்ட உலகங்கள் உள்ளன. அவற்றில் வாழ்பவர்களேயே "புறத்தார்" என்ருள். "பாரார்" முதலிய நான்கும் உயர்திணைச் சொற்களே யாதலின், உயர்திணையையே குறித்ததாயிற்று.

பல்வேறு உலகங்களிலும் நாம் காண்பது இந்நிலவுல கத்தை. அதஞல் அதனை முதற்கண் கூறிஞள். நிலவுலகத்தில் வாழும் மக்கள் ஏனை எல்லாப் பிறப்புக்களிலும் உயர்ந்தோராய், ஏனை உயிருள்ள பொருள். உயிரில்லாப்பொருள் ஆகிய எல்லாப் பொருளேயும் தமக்குக் கீழ்ப்படுத்தித் தம் விருப்பத்துக்கியைய ஆண்டுவருதலேயும், அதஞல், "மனிதஞல் ஆகாதது ஒன்றும் இல்லை" என இறுமாப்புறுதலேயும், காண்கின்ருேம்.

இனி விண்ணுலகில் வாழும் தேவர்கள் மேற்கூறிய மக்க ளினும் பேராற்றல் படைத்தவர்கள். இவர்கள் மக்களால் கீழ்ப் படுத்த இயலாத. நிலம், நீர், தீ, காற்று, வானம் என்னும் பெரும் பொருள்களேயும் தம் விருப்பப்படி கீழ்ப்படுத்தி ஆளும் தன்மையையும், மக்களது நுண்ணுடம்பை (சூக்கும தேகத்தை)ப் பற்றி அசைத்து அவரது அறிவை வேறுபடுத்தும் தன்மையை யும் உடையவர்களாய், மக்களால் பூசையும், விழாவும் பெற்றுப் பொலிபவர்கள்.

பாதாள உலகத்தில் உள்ள நாகர்கள், மக்களுக்கும், தேவ ருக்கும் உட்படாது இன்பத்திற் சிறந்தவராய்ப் பிறருக்குத் தீங்கிழைக்க வல்லவர்கள்,

ஏனைய அண்டங்களிலும் இவ்வாறமைந்த உலகங்களில் உள்ள பலரும் இத்தன்மையினரே. இவர்கள் வாழும் இடங்களின் வளத்தையும், உடுக்கும் உடைகளையும், அணியும் அணிகலன்களையும், ஊர்ந்து செல்லும் ஊர்திகளையும், ஏவலரை ஏவல்கொள்ளும் தன்மையையும், ஆடல், பாடல் முதலியவற்றால் நுகரும் இன்பங்களையும், காணினும், கேட்பினும், நினைப்பினும் பிறர் உள்ளங்களே அவற்றில் மயங்கி அழுந்திவிடுமாயின், அவற்றை உடையோர் அக்களிப்பில் ஆழ்ந்து ஒன்றையும் நினையாது மயங்கிக்கிடத்தல் இயல்பேயன்றோ! அதனால் அவர், "கடவுள்" என்றும், "அறம்', என்றும், "மறுபிறப்பு" என்றும், "வீடுபேறு" என்றும் இன்னோரன்னவற்றை நினைத்தல் எங்கே உளது! இல்லை. ஒருகால் அவர் அம்மயக்கத்தின் நீங்கி இறைவனை நினைக்கப் புகுவாராயின், "ஆறு கோடி மாயா சத்திகள்" எனக் கூறப்பட்ட இம்மாயைகள் பலவும் மீட்டும் அவரது அறிவை மயக்கித் தம்மிடத்தே ஆழ்ந்து விடும்படி செய்வனவாம். ஆதலின், அவருள் ஒருவராலும் இறைவன் அறிதற்கு அரியனாயினான்.

ஆறுகோடி மாயாசத்திகள் வேறு வேறு தம் மாயைகளைத் தொடங்கிய போதிலும், இவையெல்லாம் நீரில், எழுத்தும், நிகழ்வனவும் பேய்த்தேரும் போல நிலையில்லாது கெட்டொழிவனவாம் என்று அவற்றுள் அகப்படாது நீங்கி நின்று, இறைவனைக் சிக்கெனப் பிடித்து, அவனை நோக்கி, "வெறுப்பனவே செய்யும் என்சிறுமையைநின் பெருமையினாற் பொறுப்பவனே, என்பிறவியை வேர் அறுப்பவனே, உடையாய், அடையேன் உன் அடைக்கலம்' என்று சொல்லி அவன் திருவடியையே புகலிடமாக அடைந்து நிற்போர் உலகத்தில் மிகச்சிலர். அத்தன்மையோர்க்கு இறைவன் மிக எளியனாய் அவர்மேல் பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப் பரிவுடையனாய் அவரைக் குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டித் தேனாய் இன்னமுதமாய்த் தித்தித்து நிற்பான் ஆகலின், அத்தன்மையைப் பெற்ற இவள், "ஆராலும் காண்டற்கு அரியான் எமக்கெளிய பேராளன்" என்று சொல்லிக் களிப்பெய்துகினாருள்.

மேற்கூறியவாறு எத்துணையோ கோடியாய் உள்ள அண்டங்களை எல்லாம் கடந்து அவற்றிற்கு அப்பாற்பட்டு நிற்கும்

இறைவன் இந்நிலவுலகத்திலே இவளது திருப்பெருந்துறையிற் றானே எழுந்தருளி வந்த எளிமையை நினைந்து அடங்காத பேரன்பு அளவின்றிப் பெருகப்பெற்று, "தென்னன்பெருந்துறையான்" என்றாள்.

திருப்பெருந்துறையில் தானாகவே எழுந்தருளி வந்த அவன் செய்தது என்னெனின், "வைத்த நிதி பெண்டிர் மக்கள் குலம் கல்வி" என்னும் பித்த உலகில் தானும் அப்பித்தே கொள்ளுதற்கு உரியவளாய் இருந்த இவளை அந்நிலை மாற்றி சோதியே! சுடரே! சூழொளி விளக்கே! எங்கள் நாயகனே! என்னுயிர்த் தலைவா! என்று இவ்வாறாகத் தன்னையே நோக்கிப் பிதற்றுமாறு தனது பித்தினை ஏற்றிவிட்டான் என்பதனை "பிச்சேற்றி" என்றதனால் அறிகின்றோம்.

அவன் ஏற்றிய பித்தினால் அடைந்த பயன் இது என்பதனை, "வாரா வழியருளி" என்பதனாற் குறித்தாள். வருதலாவது இவ்வுடலை விட்டு இவ்வுலகின் நீங்கிப் போனபின். மீண்டும் வேறோர் உடலிற் புகுந்து இவ்விடத்திற்கே வந்து சேர்தல். எனவே வாரா வழியாவது, மீண்டும் அவ்வாறு வருதலின்றி அவனோடே இருத்தலாம். ஆம்! பொத்தை ஊன்சுவர் புழுப்பொதிந்து உளுத்து அசும்பு ஒழுகிய பொய்க் கூரையாகிய இவ்வுடம்பினை விட்டு நீங்கிய பின்னும் மீண்டும் இதனுள்ளே புகுந்து, வினைப்பிறவி என்கின்ற வேதனையில் அகப்பட்டுச் சாதி, குலம், பிறப்பு என்னும் சுழிப்பட்டுத் தடுமாறும் இவ்வுலகத்தில் வாழ வருதல் எதற்கு? நெல்லிக்கனியும், தேனும், பாலும், நிறை இன்னமுதும், அமுதின் சுவையும் போலும் அவனையே புல்லிக் கிடந்து, சொல்லுவதறியாப் பேரின்பத்திலே பொருந்தியிருத்தலன்றோ செயற்பாலது? அந்நிலையை இவளுக்கு அப்பெருமான் தானே வலிய வந்து வழங்கினான் எனறால், இவள் அவனையன்றி நினைப்பது யாதுளது! நினைப்பதும் வேறில்லாது அவனும் இவளது சித்தத்துள் தித்திக்கும் தேனாகி இமைப்பொழுதும் இவள் நெஞ்சில் நீங்காது நினறமை பறறி, "வந்து என் உளம் புகுந்த ஆரா அமுதாய்" என்றாள். ஆர்தல்—நிறைதல்; தெவிட்டுதல்.

இன்னும் "வாராவழி" என்றதனால் மேலிருந்து கீழே "வாராத வழி" என்பது புலப்படும். 'மேல்கீழ்' என்பன தத்துதமுறையில்,

உணர்தற்கு உரியன. தத்துவங்கள் எல்லாவற்றிலும் மேலே உள்ளது நாதம். தத்துவங்கள் எல்லாவற்றினும் கிழே உள்ளது "பிருதிவீ" எனப்படும் மண், மண்ணாகிய பிருதிவி. தத்துவம், எப்புறத்திலும் நூறுகோடி யோசனை அளவு வியாபித்துத் தனித் தனியே கிழ் ஏழும், மேல் ஏழும் ஆகிய பதினான்கு உலகங்களைக் கொண்ட ஆயிரம் கோடி அண்டங்களையுடையதாய் அவ்வளவும் வியாபித்து நிற்பது. இதற்கு மேலே உள்ள ஒவ்வொரு தத்து வமும் ஒன்றைப்போல மற்றொன்று பத்துமடங்கு விரிவையுடை யது. இவையெல்லாவற்றிற்கும் மேலே உள்ளது, நாததத்துவம். அதற்கும் அப்பால் உள்ளது ஆன்ம வியாபகம். அதனையும் கடந்து நிற்பது சிவவியாபகம. எனவே, உடம்பு நீங்குங் கால த்து இப்பிருதுவி தத்துவத்தினின்றும் நீங்கி மேற்சொல்லிய எல் லாத் தத்துவங்களையும் கடந்து எல்லாவற்றிற்கும் மேலாகிய சிவவியாபகத்தை அடைதற்குரியவள், எல்லாவற்றினும் கீழா யுள்ள இப் பிருதிவி தத்துவத்திற்கு மீண்டுவர விரும்புவாளோ? விரும்பாள். ஆதலின், அவ்வனம் திரும்பி வாராத நிலையை அருளிய அவனது கருணையைப் பெரிதும் புகழ்கின்றாள். உல கியலிலும் மேலான பதவியை அடைந்தோர் மீண்டும் கீழான நிலையை அடைய விரும்பாரன்றோ?

இங்கு மீண்டு வாராமைக்குரிய வழியாவது, திருவைந் தெழுந்து மந்திரமும், அதுவழியாகப் பெறும் மெய்யுணர்வுமா கும். அம்மந்திரத்தை முதற்கண் நகார முதலாகவும், பின்னர்ச் சிகாரம் முதலாகவும் அதன் பின்னர், மூன்றெழுத்து, இரண் டெழுத்து என்ற முறையிலும் கணித்து மேன்மேல் உயர்தல் வேண்டும். அம்முறையையெல்லாம் இவட்கு அருளிச்செய்தமை பற்றி "வாரா வழியருளி" என்றாள் என்க.

எத்துணையும் அரியோனாகிய அவன் இவட்கு இத்துணை எளிவந்து அருள்செய்வானோ என ஐயுறுவார்க்கு, அவன் அன் பரை ஆட்கொள்ளுதற்கு எத்துணையும் எளியனாய் வருவான் என்பாள், "அலைகடல்வாய் மீன்விசிறும்" என அவன வலைஞனாய் வந்து வலைவிசிய திருவிளையாடலை எடுத்துக் காட்டினாள். "மீன் விசிறும்" என்றது, "மீனின் பொருட்டு வலைவிசிறும்" என்றபடி.

இத்துணை எளியனாதற்குக் காரணம் அவனுக்கு இயல்பா யுள்ள எல்லையில்லாத பெருங்கருணையே எனக் காரணங் கூறி

அதனை வலியுறுத்தற் பொருட்டு "பேரரசை வாரியனை" என்றாள். ஆசை, இங்குக் கருணையைக் குறித்தது. வாரியன்-கடலாய் இருப்பவன். இவ்வாறன்றி "ஆசை" என்பது அன்பைக் குறித்தது எனக்கொண்டு, "என்போன்றாரது பேரன்பாகிய ஆறுகளெல்லாம் சென்று அடங்குதற்குரிய அருட்கடலாய் உள்ளவன்" என்று உரைப்பினும் பொருந்தும். இங்ஙனம் பெருந்துறையானால் பிச்சேற்றப்பட்டுப் பிச்சியாகிய இவள் அப்பெருமானைப் பலபடப் பாடி அம்மனைக் காயை ஏறிந்தாள்.

## 3-ம் திருப்பாட்டு

### இந்திரனும் மாயனும்

இரண்டாமவள் எறிந்த அம்மனைக்காயை மற்றொருத்தி பிடித்துப் பின்வரும் பாடலைப்பாடி எறிகின்றாள்:—

இந்திரனும் மாலயனும் ஏனோரும் வானோரும்
அந்தரமே நிற்கச் சிவன்அவனி வந்தருளி
எந்தரமும் ஆட்கொண்டு தோட்கொண்ட நீற்றனாய்ச்
சிந்தனையை வந்துருக்கும் சீரார் பெருந்துறையான்
பந்தம் பறியப் பரிமேற்கொண் டான்தந்த
அந்தமிலா ஆனந்தம் பாடுதுங்காண் அம்மானாய்.

"ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்றாகும்" என்றபடி, உயிர்கள் நினைத்தவை எல்லாம் நினைத்தவாறே முடிவதில்லை. அவற்றிற்கு வேறாய் முடிவதும் உண்டு. "யானை வேட்டுவன் யானையும் பெறுமே, குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே" என்னும் புறப்பாட்டடிகள் இதனையே தெரிவிக்கின்றன. அஃதாவது, வேட்டைக்குச் சென்ற இருவருள் ஒருவன் யானையைப் பிடிக்கச் சென்றான், மற்றொருவன் 'குறும்பூழ்' (காடை) என்னும் பறவையைப் பிடிக்கச் சென்றான். 'இவருள் யானையைப் பிடிக்கச்சென்றவனுக்கு அது கிடைத்தல் அரிது; அதனால் அவன், வறுங்கையோடு வருவான்' என்றும், குறும்பூழ் பிடிக்கச்சென்றோனுக்கு அஃது எளிதில் கிடைத்துவிடும்; அதனால், அவன் அதனைப் பிடித்துக் கொண்டே வருவான்' என்றும் நினைப்பதுதான் மக்கள் இயற்கை. வேட்டைக்குச் சென்றோரும் அவ்வாறுதான் நினைத்திருப்பர். முடிவு அவற்றிற்கு மாறாய் நிகழ்தலும் உண்டு. அஃதாவது, யானை பிடிக்கச் சென்றோன்

அதனைப் பிடித்துக்கொண்டேவர, குறும்பூழ் பிடிக்கச்சென்றேன் அது கிடைக்காமல், வெறுங்கையோடு வருதலும் உண்டு. இவ்வாறு நாம் நினைப்பதற்கு மாருகச் செயல்கள் முடிதல் அனுபவத்திற் காண்பது. அதுபோன்ற ஒன்றைத்தான் இப்பெண் எடுத்துக் கூறுகின்ருள்.

அஃதாவது தேவர்கள் விண்ணுலகத்தில் வாழ்வோர். அவர்களில் தலைமை பெற்றவர் இந்திரன், திருமால், பிரமன், மற்றும சிலர். இவர்கட்கே சிவபெருமானது திருவருள் கிடைக்கும் என்றும், மக்கள் மண்ணுலகில் வாழ்வோர்; அவர்களிலும் பெண்பாலார் மிக்க எளிமையுடையவர்; இவர்கட்குச் சிவபெருமான் திருவருள கிடைத்தல் இபலாது என்றுந்தான் யாவரும் நினைப்பர். பெண்டிர்க்கு வீடுபேறு இல்லையென்றே கூறுவோரும் உளர். ஆயினும் அவரெல்லாம் மருண்டு நோக்குமாறு இந்திரன முதலிய தேவர் பலரும் அந்தரத்தில் (ஆகாயத்தில்) ஆதரவின்றி ஏக்கமுற்று விழித்திருக்கச் சிவபெருமான் இம்மண ணுலகிலே எழுந்தருளிவந்து இவளை ஆட்கொண்டான் எனபதை, "இந்திரனும் மாலயனும் ஏனேரும் வானேரும் – அந்தரமே நிற்கச் சிவன்அவனி வந்தருளி எந்தரமும் ஆட்கொண்டு" எனப் பெருமிதத்துடன கூறுகின்ருள். அவனி–பூமி.

சிவபெருமான் அவனியில் வந்தபொழுது, அவனது பல வகை அடையாளங்களில், தனது திரண்ட தோள்களின்மேல் பூசியிருந்த வெள்ளிய திருநீற்றின் அழகில் இவளது உள்ளம் பெரிதும் ஈடுபட்டுப் போயிற்று. அதனல் அவனைப் பாடும் பொழுது "தோட்கோண்ட நீற்றனுய்ச் சிந்தனையை வந்துருக்கும் சீரார் பெருந்துறையான்" என்று பாடுகின்ருள்.

தனியிடத்தில் இவளுக்குத் தன் உண்மை வடிவத்துடன் இவ்வாறு காட்சியளித்த சிவபெருமான், பலர் கூடியிருக்கும் இடத்தில் இவள்முன் வரும்பொழுது, மாறுவேடத்துடன் வந்தருளினன். அஃதாவது குதிரை விற்கும் குதிரை வாணிகனுய் ஓர் அழகிய குதிரையின் மீது ஏறி வந்தருளினன். அதனல், "பரிமேற் கோண்டான்" என்றும கூறுகின்ருள்.

சிவபெருமான், மாறுவேடத்தில் குதிரைமேற்கொண்டு வந்ததனல் இவளுக்கு மேலும் அப்பெருமான்பால் காதல் மீதூர,

அவன்மீதே பித்துக்கொண்டு பிச்சியாகி அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்து, அகலிடத்தார் ஆசாரங்களையெல்லாம் அகன்று அவன் பின்னே சென்று திரியலானாள். ஆகவே, உலகில் உள்ளவர்க்கு உளவாகிய பாசப் பிணிப்புக்கள் அனைத்தும் அற்றொழிந்தன. அதனையே, ''பந்தம் பறியப் பரிமேற்கொண்டான்'' என்றாள். சிவபிரான் பரிமேற்கொண்டு வந்ததனால் இவளது பந்தம்மட்டும் அன்று; இவளை ஆண்டு கொண்டிருந்த அரசனாகிய பாண்டியனது பந்தமும், மற்றும் பலரது பந்தமும் அற்றொழிந்தன. அதனானே, 'என் பந்தம் பறிய' என்னாது, பொதுப்பட, ''பந்தம் பறியப் பரிமேற் கொண்டான்'' என்று கூறினாள்.

பந்தம் பறியப்பெற்று; அவன் பின்னே திரியலான இவளுக்கு அவன் தந்தது ஏதேனும் உண்டோ எனின், ஏதேனும் சிறு பயன் அன்று அவன் தந்தது; எல்லையில்லாத இன்பப் பெருவெள்ளத்தைத் தந்தான் என்றற்கு, ''பரிமேற் கொண்டான் தந்த அந்தமிலா ஆனந்தம்'' என்றாள்.

அந்தம்–முடிவு; எல்லை. உலகின்கண் உள்ள ஆனந்தம்–இன்பம், விடயானந்தம் (ஐம்புல இன்பம்). இஃது அந்தம்–முடிவு உடையது. அதற்குக் காரணம் பல. உலக இன்பம் குண வடிவமானது. குணம் மூன்று. அவை சாத்துவிகம், இராசதம், தாமதம் என்பன. இவை மூன்றும் ஒன்றை விட்டு ஒன்று பிரிந்து நிற்பதில்லை. பொருள்கள் சத்துவ குணத்தைப் பெற்றிருக்கும் பொழுது இன்பம் தருவனவாய் இருக்கும். ஆனால் அக்குணம் நிலைத்து நிற்பதில்லை. சிறிது பொழுதில் சத்துவ குணம் போய்விட, இராசத குணம் தோன்றும். அப்பொழுது முன் இன்பத்தைத் தந்த பொருளே துன்பத்தைத் தருவதாய் மாறிவிடும். இராசத குணம் தோன்றாது தாமத குணம் தோன்றுமாயின், இன்பம், துன்பம் என்னும் இரண்டும் இன்றி மயக்கம் உண்டாகும். எடுத்துக் காட்டாக ஒன்று சொல்லலாம். பால் தன்சுவையானாலும், பிறவற்றாலும் இன்பத்தைத் தருகின்ற ஒரு பொருள். ஆயினும், அது கறந்த பொழுது, அல்லது பதமாகக் காய்ச்சி வைக்கப்பட்ட பொழுதே இன்பத்தைத் தருவதாய் இருக்கும். சிறிது நேரம் செல்லுமாயின், புளிப்பையுடையதாய்க

கெட்டு விடும். அப்பொழுது அது வெறுக்கத் தக்கதாய்த் துன்ப மயமாகி விடும். இவ்வாறே ஒவ்வொரு பொருளையும் பார்த்துக் கொள்ளலாம். எனவே உலகில் சத்துவ குணம் ஒன்று மட்டும் இல்லை; மற்றும் இராசத, தாமத குணங்களும் இருப்பதால், உலகில் இன்டம் மட்டும் இல்லாமல், துன்பம். மயக்கம் என்பனவும் உடன் கலந்தே இருக்கின்றன. இம்மூக் குணங்களும் சகடக்கால் போல மாறி மாறி வந்து கொண்டே இருப்பதால், உலக இன்பம் வரம்பு பட்டதாகின்றது. அஃதாவது இன்பத்திற்கு முடிவை உண்டாக்குவது துன்பம் அல்லது மயக்கம். அவை வருகின்ற பொழுது முன்பிருந்த இன்பம் முடிவெய்துகின்றது. இறைவன் இம்மூக் குணங்களுள் ஒன்றையும்உடையன் அல்லன். அவன் குணாதீதன், நிர்க்குணன், அருளே வடிவானவன். அதனால் அவனது இன்பம் முடிவில்லாத இன்பமாகும். இவற்றை நன்கறிகின்ற காரணத்தால், பெரியோர்கள் உலக இன்பத்தை விரும்பாது, இறையின்பம் ஒன்றையே விரும்புகின்றார்கள். ஆகவே, பெருந்துறைப் பெருமானும், பந்தம் பறியப் பரிமேற் கொண்டவனும்ஆகியஅவனிடத்தில் சிந்தையைப் பறிகொடுத்த இவள்,அதன் பயனாக அந்தம் இலா ஆனந்தத்தையே பெற்றாள். ஆதலின், தனது அம்மனைப் பாட்டில், "அந்தம் இலா ஆனந்தம் பாடுதுங்காண் அம்மானாய்" என்று பாடுகின்றாள்.

மற்றொரு வகையிலும் உலக இன்பம் வரம்புடையதாகின்றது. அஃதாவது உலகிலுள்ள நுகர்ச்சிப் பொருட்கும், நுகர்பவனாகிய உயிர்க் கிழவனுக்கும் நேரே தொடர்பு இல்லை. இடையே கருவி கரணங்கள் நிற்கின்றன. அக்கருவி கரணங்கள் நுகர்ச்சிப் பொருள்களிலிருந்து பெற்றுக் கொடுக்கும் இன்பத்தையே உயிர் அனுபவிக்கின்றது. பால், பழம் முதலியவற்றிலுள்ள இனிப்பை 'நாக்கு' என்னும் புறக்கருவி வாங்கித்தர, பின்னர் அதனை மனம் முதலிய அகக்கருவிகள் பெற்றுச் சேர்ப்பிக்கவே உயிர் அவ்வினிப்பினாலாகிய இன்பத்தை அனுபவிக்கும். மற்றைய புலன்களின் இன்பமும் இவ்வாறேயாம்.

இங்ஙனம் உள்ள இக்கருவி கரணங்கள் சித்தன்றிச் சடமேயாகலின், அவை வரம்புபட்ட ஆற்றலையே உடையன. ஆதலின், அவை நுகர்ச்சிப் பொருள்களின தன்மையை ஓரளவே பெறுதற்குரியன; அளவின்றி அவற்றைப் பெறும் ஆற்றலுடையன

அல்ல; 'அளவிற்கு மேற்பட்டால் அமுதமும் நஞ்சாம்' என்னும் பழமொழி கருவி கரணங்களின் ஆற்றல் இன்மையையே குறிக்கும். எனவே, நுகர்ச்சிப் பொருள்கள் மாற்றம் இன்றிச் சத்துவ குணமாகவே இருப்பினும், அவற்றை இக்கருவி கரணங்கள் நுகரும் ஆற்றலின்றி மெலிந்தொழிவனவாம். அதனுலும் உலக இன்பம் வரம்புடையதாகின்றது. இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு இவ்வாறு கருவி கரணங்களின் வழியாகவன்றி நேரே அமைந்திருப்பது. அதனுல் உண்மை, அறிவு, இன்பம் (சத்து, சித்து, ஆனந்தம்) என்னும் இவையே வடிவமாக உள்ள இறைவனது இன்பத்தை அறிவே வடிவாய உயிர் முடிவின்றி எஞ்ஞான்றும் அனுபவித்து நிற்கும். அன்றியும் இறைவன் அளக்கலாகாப் பெரும் பொருளாதலின், அவனது இன்பம் புதிது புதிதாய் எல்லையின்றி உயிரினிடத்துப் பெருகிநிற்கும். ஆதலின் இறைவனே அடைந்த உயிர் அந்தமில் இன்பத்தை ஆர்ந்து நிற்பதாகும். அத்தகைய அந்தமிலா ஆனந்தத்தையே இவள் பெற்றுள் என்க.

இவ்வாருகவே பந்தங்கள் அனைத்தையும் அகன்று; சிந்தனையை வந்து உருக்கிய சீரார் பெருந்துறையானையே தொடர்ந்து நின்ற இவள், தன்னை மறந்து, தன் நாமங் கெட்டு, தலைவன் தாளேயே தலைப்பட்டு நின்றவளாதல் வெளிப்படை.

(தொடரும்)

---

## அறிவிப்பு

### தில்லையில் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம் திருவாசக சிலாசாசனம் நன்கொடை

சைவத் திருமுறைகளுள் எட்டாவதாக விளங்குவதும், ஸ்ரீ மாணிக்க வாசகப்பெருமான் அருளியதும், தில்லைச்சிற்றம்பலவரே தம் திருக்கையால் எழுதியபெருமையுடையதுமான திருவாசகம் – சிவபுராணம் முதல் அச்சோப்பதிகம் வரையில் 51 திருப்பதிகங்கள் கொண்டது. 658 திருப்பாசுரங்களையுடையது. இவை திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் சிலாசாசனம் செய்விக்கப்பெற்றுச் சிதம்பரம் நடராசப்பெருமான் திருக்கோயில் சிவகங்கைத் தீர்த்தக்கரையில் பதிக்கப்பெற்றுவருகிறது.

தற்பொழுது ரூ. 7000 செலவில் திருவாசகம் சிவபுராணம் முதல் திருக்கோத்தும்பியில் 11-ம் பாடல் முடிய 225 திருப்பாசுரங்கள் சிவகங்கைத்தீர்த்தக்கரை கிழக்குப்பக்கத்தில் பதிப்பிக்கப்பெற்றுள்ளன மேற்கொண்டு கல்வெட்டுப்பணி நடைபெற்றுவருகிறது.

# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஆறுந்தந்திரம் Tantra the Sixth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,

---

மலர் 18, இதழ் 8-ன் தொடர்ச்சி

### குருவருளால் அரியன யாவும் பெறுவன
### Attainments rare by Master's Grace

3. சித்திகள் எட்டொடுந் திண்சிவமாக்கிய
சுத்தியும், எண்சத்தித் தூய்மையும் யோகத்துச்
சத்தியும் மந்திரசாதக போதமும்
பத்தியும் நாதன் அருளிற் பயிலுமே.

The miraculous powers of the Siddhies eight,
The immaculate purity of the Saktis eight,
The baptismal act supreme that turneth Jeeva into Siva,
The mystic powers of Occult yoga,
Of mantra, of bhakti and of Gnana,
— All these shalt thou attain
If the Master but his grace confers.

எட்டுச்சித்திகளும், சிவனைச் சிவமாக்கும் ஆன்ம சுத்திச் செயலும், எட்டுச்சத்திகளின் தூய்மையும், யோக சத்தியும், மந்திர சாதகமும், பத்திஉணர்ச்சியும், ஞானபோதமும் - இவை யனைத்தும் குருநாதன் அருள்வானேல் கைவருதலாகும்.

### சற்குரு சிவனோடு ஒக்குமாறு
### The Guru – Siva Parallelism

4. எல்லா உலகிற்கும் அப்பாலோன் இப்பாலாய்
நல்லார் உள்ளத்து மிக்கருள் நல்கலால்
எல்லாரும் உய்யக்கொண் டிங்கே அளித்தலாற்
சொல்லார்ந்த நற்குருச் சுத்த சிவமே.

He is beyond worlds all
Yet, here below he bestoweth his grace abundant
On the good and the devout
And in love worketh for the salvation of all
Thus is the holy Master
Whose praise is beyond speech
Like unto Siva, the Being Pure.

உலகங்களுக்கெல்லாம் அப்பாலாய் இருக்கிருன்; இருப் பினும் இவ்வுலகத்தே நல்லவர் உள்ளத்தில் மிகுந்த அருள் சுரக் கின்ருன்; எல்லோருமே பாசத்தளையிலிருந்து விடுபடுமாறு கருணையை வழங்குகின்ருன். எனவே புகழ்நிறைந்த சற்குரு சுத்த சிவத்தை ஒத்திருக்கிருன்.

குருபரன் அன்புச்செயல்கள்

The Compassionate acts of the holy Guru

5. தேவெனுஞ் சுத்த குருவும்; உபாயத்துள்
யாவையும் மூன்ரு யுனக்கண்டுரையாலே
மூவாப்பசுபாச மாற்றியே முத்திப்பால்
யாவையும் நல்குங் குருபரன் அன்புற்றே.

The holy master is truly a Deva;
By his divine art he maketh me perceive all things in categories three,
By his sacred precepts sunders the bonds of Pasu-pasa
And maketh me drink of the milk of salvation
— All in benign compassion the Gurupara doth.

பரமகுரு தேவனே ஆவான். யாவற்றையும் பதி, பசு, பாசமென்னும் முப்பொருள் உண்மையில் அடங்கக்காணும் உபாயத்தை அருள்கின்ருன்; பின்னே, ஞானபோதனையால் தொன்மையான பசு பாசத்தை மாற்றி, முத்திப்பால் ஊட்டு கின்ருன். எல்லாம் கழிபேரன்பினுல் குருபரன் செய்கின்ருன்.

(தொடரும்)

# முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்

## உரைநடை

பாலகவி வயிநாகரம்,
**திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,**
தேவகோட்டை.

(மலர் 18. இதழ் 8-ன் தொடர்ச்சி)

இழுமென்மொழித்தெளி தமிழின்வடித்திடு நவரசமே
இதயவிருட்டற வுணர்விலுதித்திடு சுடரொளியே
கழுவுமணிக்கல னடுவிலிழைத்திடு குலமணியே
கனிதருமுக்கனி யொடுவடிகட்டிய சுவையமுதே
ஒழுகுநறைச்செழு மலர்விரியக்கமழ் புதுமணமே
உருகுமுளத்தருள் பெருகியுவட்டெழு சலநிதியே
பழமறைகட்கொரு முதல்வன்முழக்குக சிறுபறையே
பருதிபுரச்சிறு குமரன்முழக்குக சிறுபறையே. 91

இனிய மெல்லிய சொற்களையுடைய தெளிந்த தமிழில் வடித்தெடுத்த நவரசமே! அஞ்ஞான இருள் நீங்கும்படி உணர்வில் உதிக்கின்ற சுடரொளியே! சாணையிடப்பட்ட இரத்தினங்களாலாகிய ஆபரணத்தின் நடுவில் வைத்து இழைக்கப்படுகின்ற குலமணியே! கனிந்த வாழை, பலா, மா ஆகிய முக்கனிகளுடன் வடிகட்டி யெடுத்த சுவையமுதே! தேனொழுகுகின்ற செழுமையான மலர்விரிய வீசுகின்ற புதுமணமே! உருகுகின்ற உள்ளத்தில் அருள் பெருகி உவட்டெடுக்கின்ற கருணைக் கடலே! பழய வேதங்களுக்கு ஒப்பற்ற முதல்வனே! சிறுபறையை முழக்கியருளுவாயாக. பருதிபுரத்தில் எழுந்தருளியுள்ள சிறிய குமரப்பெருமானே! சிறுபறையை முழக்கியருளுவாயாக.

### சிறுதேர்ப்பருவம்

போரோடு படைதுறந் துடறிறந் தோடுசெம்
புனலோட வோடிநிமிரும்
புணரிப் பெருந்தானை யவுணப் படைத்தலைவர்
பூதப் படைத்த லைவர் முன்

தாரோ டவிழ்ந்திட்ட குஞ்சிக் கிமைத்திட்ட
தழல்விழிக் கெதிர் செலாத
தாளுக்கு வாள்சோர் தடக்கைக்கு நாமநும்
தாலிக்கு வேலிகொ லெனுப்
பீரோடு கொங்கைக்க ணீரோடு வெள்ளருவி
பெருகக் கடைக்க ணிற்கும்
பெய்வளை யவர்க்கோத வவர்விழிக டொறுமிளம்
பேதையர்கள் கண்டொ றுமெனத்
தேரோடு மொருபெருஞ் சிலை யோடு நின்றவன்
சிறுதே ருருட்டி யருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டி யருளே. 92

பூதப்படைத் தலைவர்களுக்கு முன்பு, போரையும் படைக் கலங்களையும் துறந்து, உடல் பிளந்தோடுகின்ற செங்குருதிப் புனல் பாய்ந்தோடப் புறமுதுகிட்டோடித் தப்புகின்ற, கடல் போன்ற பெரிய சேனைகளையுடைய அவுணப்படைத் தலைவர்களது, மாலையுடன் அவிழ்ந்த குடுமிக்கும் இமைத்தலைச் செய்கின்ற தீய கண்களுக்கும், பின் வாங்கிச் செல்லுகின்ற கால்களுக்கும், வாள் சோர்ந்த பெரிய கைகளுக்கும், அச்சத்தையுடைய உமது தாலிகளுக்கும் பாது காவலாயிருப்போமென்று சொல்லிப் பசலையோடிய கொங்கைகளில் கண்ணீர் பாய்ந்தோடுகின்ற வெள்ளிய அருவியானது பெருகக் கணவர் வருகையை நோக்கிக் கடை வாயிலில் நிற்கும் வளையல்களை அணிந்த அவுணப் படைத் தலைவர்களின் மனைவியருக்கு அவரது பெரிய விழிகள் தோறும் இளநங்கையரது கண்கள் தோறும் போலத் தேருடனும் ஒப்பற்ற பெரிய வில்லுடனும் நின்றவனே! சிறு தேரை உருட்டியருளுவாயாக. எல்லாச் செல்வங்களும் பெருகும்படி தழைக்கின்ற கந்தபுரியில் எழுந்தருளியுள்ள இளங்குமரனே! சிறுதேரை உருட்டி யருளுவாயாக.

---

(தொடரும்)

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

[மலர் 18, இதழ் 8-ன் தொடர்ச்சி]

## IV

## MANIKKA VASAHAR

(Sanskrit form MANIKYA VACHAKA)

83. யானேதும் பிறப்பஞ்சேனிறப்பதனுக் கென்
 கடவேன்
 வானேயும் பெறில்வேண்டேன் மண்ணுள் வான்
 மதித்துமிரேன்
 றேனேயு மலர்க்கொன்றைச் சிவனேயெம் பெரு
 மானெம்
 மானேயுன் னருள்பெறுநா ளென்றென்றே
 வருந்துவனே.

83 I have no fear of births, but quake at thought
 that I must die.
 E'en heave'n to me were naught; for earth's whole
 empire what care I?
 O Siva wreathed with honeyed blossoms, "When
 shall come the morn
 When Thou wilt grant Thy grace to me?" I cry
 with anguish torn.

—— (To be continued)

---

# LORD AYYAPPAN

H. H. Jagadguru Sri Sankaracharya of Kanchi

THE Supreme Being manifests Himself as Siva and Narayana, the former to teach us jnana (true knowledge) and the latter to protect us.

We conceive of Siva as one sitting under a tree or on the peak of a mountain, besmeared with sacred ash, wearing the skin of the tiger and the elephant, calm and serene, contemplating inwardly, and showing the symbol of knowledge or jnana mudra. He is the Supreme Teacher who taught us the ultimate Truth which is nothing else than Himself.

Protection is a kingly duty and so we contemplate Narayana as one gorgeously dressed and wearing priceless jewels.

Siva likes to be bathed with holy water always while Narayana likes to be decorated.

So we say, alankaara priyo Vishnu, abhisheka priya Sivah.

The beauty of Vishnu's form is such that one would not like to withdraw one's eye from Him.

The beauty of this physical form is carried in His avatars like Sri Rama and Sri Krishna.

The Brahma-amsa of Siva, associated with jnana and tapas (penance) and the Kshatra-amsa of Narayana, associated with bhakti, prema and kripa (devotion, love and mercy) are both required to guide and protect us.

The Puranas contain instances of Narayana assuming a feminine charm capable even of attracting

---

The above article is reproduced with the kind permission of the Editor of 'Bhavan's Journal'.

the austere mind of Siva. When this merciful charm of Narayana and the serene jnana of Siva combined, an effulgent light (tejas) was the outcome.

Out of this tejas was born Ayyappan also known as Ayyanar, Sasta or Hariharaputra.

Ayyan is a corruption of Aryan, which means 'one worthy of reverence.'

Ayyanar has come to be regarded as the third son of Siva, the other two being Pillaiyar (Ganesa) and Kumaran (Karttikeya), both names conveying the meaning 'child'.

Ayyanar embodies in Himself the qualities of both Siva and Vishnu.

There are temples dedicated to Him in the South, in Tamil Nad and largely in Kerala. He keeps guard over us, protects us from evil spirits, and also endows us with jnana, leading to salvation.

If we do our duty invoking His grace; we are bound to succeed and prosper.

---

# ஞானப்பழம்

புலவர், திரு. வே. அரசு அவர்கள்,
தமிழாசிரியர், எளச்சிபாளையம்.
(மலர் 18, இதழ் 8. பக்கம் 399ன் தொடர்ச்சி)

---

இவை இரண்டிற்கும் ஏற்பட்ட போராட்டமே திரு முருகனின் அவதாரம்.

விரிஞ்சன்மா தேவராலும் வெலற்கரும் விறலோ னாகிப்
பெருஞ்சுரர் பதமும்வேத ஒழுக்கமும் பிறவும் மாற்றி
அருஞ்சிறை அவர்க்குச்செய்த அவுணர்கோ னாவி கொள்வான்
பரஞ்சுட ருருவாய்வந்த குமரனைப் பணிதல் செய்வாம்.

பிரம்மாவுக்குப் பிள்ளைகள் பலர். அவர்களில் காசியபர் ஒருவர். அவர் உலகை மறந்து தம்மை மறந்து தவத்தில் ஈடுபட்டிருந்தார். அந்நிலையை அறிந்த அசுரர்களின் குல குருவாகிய சுக்கிரரச்சாரியார் அசுர குலத்தை ஓங்கச் செய்ய வேண்டும் என்று ஆசைப்பட்டார். அப்பொழுது அசுரகுலத்தில் அசுரேந்திரனும் அவன் மனைவி மங்கலகேசியும் வாழ்ந்தனர். அவர்களுக்குச் சுரசை என்னும் ஒருபெண் இருந்தாள். அவளுக்குச் சுக்கிராச்சாரியார் பலவிதமான கலைகளையும், மாயவித்தைகளையும் கற்பித்தார். அவளும் மாயத்தன்மையில் நல்ல தேர்ச்சி பெற்று விளங்கினாள். ஆதலால் அவளுக்கு மாயை என்றே பெயரிட்டார். அவளால் அசுரகுலம் தழைத்தோங்கி அடையப் போகும் பெருமையை எண்ணி மகிழ்ச்சி அடைந்தார்.

மாயை, ஒருநாள் காசியபர் தவம் செய்யும் இடத்திற்குச் சென்று அவ்விடத்தை அற்புதமான, இனிமையான சூழல் உடையதாகச் செய்தாள். பல ஆண்டுக்காலம் தவமியற்றிய முனிவருக்குச் சூழ்நிலையின் மாற்றம் புதிய உணர்வை ஊட்டவே தவம் கலைந்து கண்விழித்துப் பார்த்தார். அப்பொழுது எதிரே நின்றிருந்த மாயையின் அழகு, அவரைக் கவர்ந்தது. இருவரும் சேர்ந்து அன்போடு இன்பமாய் வாழ்ந்தனர். அவர்களுக்கு மூன்று ஆண் மக்களும், ஒரு பெண்ணும், பிறந்தார்கள். அவர்

களே அசுரர்களாகிய சூரபதுமன், சிங்கமுகன், தாரகாசுரன், அஜமுகி என்போர்.

சூரபதுமனும் தம்பியரும் அழிவற்ற ஆயுளும், நிலேயான செல்வமும், நீண்ட புகழும் அடையச் சிவ பெருமானை நோக்கிக் கடுமையான தவம் செய்தனர். ஈசனும் கருணை கூர்ந்து காட்சி தந்து நீங்கள் மூவரும் சிறப்போடு அரசாட்சிசெய்து பெரும் புகழோடு வாழுங்கள். தேவரெல்லாம் வணங்கும் மூவராகிய உங்களை, "ஈறில்லாத நம் சக்தி ஒன்றே வெல்லவல்லது. வேருென்றும் உங்களை அழிக்காது" என்று வரம்தந்து மறைந் தார். "முன்னவனே முன்னின்ருல் முடியாத பொருளுளதோ?"

இறைவனிடம் பெற்ற வரங்களைத் தீயவழியில் செலவிட் டார்கள். அகந்தை உடையவர்களாய்த் தேவர்க்கும் முனி வர்க்கும் துன்பம் செய்தனர். தேவர்கள் வருந்தினுர்கள். முனி வர்கள் துன்புற்ருர்கள். பலநூருயிரம் ஆண்டுக்காலம் இவ் வாறு வேதனையில் வாடினுர்கள். அத்துயரம் பொறுக்கமாட் டாத அவர்கள் இறைவனை அடைந்து தங்களுக்கு அருள் புரிய வேண்டும் என்று வேண்டினுர்கள். இறைவனும் வெகு விரைவி லேயே உங்கள் துன்பம் தீரும் என்று கூறி அருள்புரிந்தார்.

தேசுதிகழ்
பூங்கயிலே வெற்பில் புனைமலர்ப்பூங் கோதையிடப்
பாங்குறையும் முக்கட் பரஞ்சோதி — ஆங்கொருநாள்
வெந்தகுவர்க் காற்ருத விண்ணோர் முறைக்கிரங்கி
ஐந்துமுகத் தோடு அதோமுகமும் — தந்து
திருமுகங்கள் ஆருகிச் செந்தழற்கண் ஆறும்
ஒருமுகமாய்த் தீப்பொறி ஆறுய்ப்ப — விரிபுவனம்
எங்கும் பரக்க இமையோர்கண் டஞ்சுதலும்

— உடனே தம்முடைய ஐந்து திருமுகங்களோடு கூட அதோமுகம் என்னும் ஆருவது முகத்தையும்கொண்டு விளங் கினுர். அவ் வாறு திருமுகங்களிலுமுள்ள நெற்றிக் கண்களி லிருந்தும் ஆறு தீப்பொறிகள் வெளிப்பட்டன. அப்பொறிகளை அக்கினியும் வாயுவும் சரவணம் எனனும் பொய்கையில் கொண் டுய்த்தனர். அப்பொய்கையில் தோன்றிய ஆறு தாமரை மலர் களிலும் அப்பொறிகள் படிந்து ஆறு குழந்தைகளாக மாறிக்

காட்சியளித்தன.

மறைகளின் முடிவால் வாக்கால் மனத்தினு லளக்கொணுமல்
நிறைவுடன் யாண்டுமாகி நின்றிடும் நிமல மூர்த்தி
அறுமுக உருவாய்த் தோன்றி அருளொடு சரவனத்தில்
வெறிகமழ் கமலப் போதில்வீற் றிருந்தருளினுனே.

இங்ஙனம், ஆறு தீப்பொறிகளாக இருந்து ஆறு குழந்தை களாக மாறிய அறுமுக வேளுக்குக் கார்த்திகைப் பெண்கள் ஆறுபேர் பாலூட்டி வளர்த்து வந்தனர். அவர்களால் வளர்க் கப்பட்டமையாலேயே முருகனுக்குக் கார்த்திகேயன் என்னும் பெயரும் உண்டாயிற்று.

அருவமு முருவு மாகி யநாதியாய்ப் பலவாய் ஒன்ருய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்க ளாறுங் கரங்கள்பன் னிரண்டும்கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தனன் உலகம்உய்ய.

உளனென் பார்க்குள னுனய்
இலையென் ப்ார்க்குமிலை யானுய் – என்றுர் புலவர்.

அதுபோல, முருகப்பெருமான் உருவமில்லாத வராகவும், உருவம் உடையவராகவும், முதலும் முடிவு மற்றவராகவும், ஒன்று என்பவர்களுக்கு ஒருவனுகவும், பல என்பவர்களுக்குப் பல வடிவங்களாகவும், பிரமமாகிய ஒளிப்பிழம்பையே தன்னுட லாகக் கொண்டு கருணை பொழிகினற ஆறுமுகங்களுடனும், பன்னிரண்டு கைகளுடனும் உலகம் உய்ய வேண்டும் என் பதற்காகச் சரவனப் பொய்கையில் பிறந்தார். இவ்வாறு, உலகம் வாழவும், தேவர்கள் விடுதலை பெறவும், அசுரர்கள் அழியவும் பிறப்பெடுத்த முருகப்பெருமான் நாளும் வளர்ந்து பல பல திருவிளையாடல்களைச் செய்து வந்தார்.

தொடக்கத்திலேயே – ஞானப்பழத்தைப் பிறருக்கு வாரி வழங்கிய–தந்தைக்கும் ஞானப் பழரசத்தைப் பருகக் கொடுத்த– ஞானப் பழமாகவே விளங்குகினற முருகப்பெருமானைப் பற்றிப் பேசத் தொடங்குவதாகக் கூறிக்கொணடேன். எனவே, முதலில் ஞானப் பழத்தைக் கார்தது‌கேயன யார் யாருககுப் பருகக் கொடுத்தான் என்பதைப் பார்ப்போம். முருகனளித்த ஞானப்

பழத்தை உண்டவர்கள் ஒருவரா இருவரா? எண்ணிச் சொல்ல? பலரல்லவா?

முக்கட் பரம னருள்செய் வரத்தினுல்
எக்கா லமுமழியா ஏற்றமிகு சூரற்கும்
ஏந்துபடைப் போர்நாளி லஞ்ஞான மாய்ந்திட
ஈந்தனன் ஞானப் பழம்.

பகைவனுகிய சூரபதுமனும் கூட அல்லவா தான் அழியப் போகின்ற – தான் என்னும் செருக்குக் குலையப் போகின்ற கடைசி நேரத்தில் ஞானப் பழமாகிய முருகன் திருவுருவைக் கண்டு – ஞானப் பழத்தை உண்டு – அப் பழரசத்தில் மகிழ்ந்து போனுன். என்றுலும, அப்பெருமான், அடிகளில் அவன் வணங் காமைக்குக் காரணம் – அவரது அருள் ஞான வெள்ளத்தில் மூழ்கித் திளைக்கப் பெருமைக்குக் காரணம் தன்மான உணர்ச்சி என்றல்லவா எண்ணுகிருன். "மானம் இழந்தபின் வாழாமை முன்னினிதே" – என்பதனுலல்லவா – அவன் அவரோடு போரிட் டுக் கூறுடலம் இரண்டாகச் சேவலும், மயிலுமானுன். போர்க் களத்திலே சூரபதுமனுக்குச் சிறிது ஞானமும் கொடுத்துத் தமது அழகிய திருவுருவக் கோலமும் காட்டி நின்ருர் முருகப் பெருமான்.

அதனுல், மெய்ஞ்ஞான உணர்வு வரப்பெற்ருன். எனவே

கோலமா மஞ்ஞை தன்னில் குலவிய குமரன் தன்னைப்
பாலனென் றிருந்தே னந்நாள், பரிசிவை உணர்ந்தி லேன்யான்
மாலயன் தனக்கும் ஏனை வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகா ரணமாய் நின்ற மூர்த்தியிம் மூர்த்தி யன்ருே?

அழகு மிகுந்த மயிலின்மேல் வீற்றிருக்கின்ற இளமை யுடைய அழகனுன முருகனே, அன்றிலிருந்து இன்றுவரைச் சிறுவன் என்றே எண்ணியிருந்தேனே.

சீர்இளந் தோகை மயில்மேலே — ஒரு
செஞ்சுடர் தோன்றும் திறம்போலே!

— வந்து தோன்றுகின்ருன் என்று அருணகிரியார் பாடிய முறையிலும்,

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

# எந்நாளும் இன்பமே!

திரு. எ. மாணிக்கம் அவர்கள்,
''முருக நிலையம்'', விரூர்.

[மலர் 18, இதழ் 8-ன் தொடர்ச்சி]

நமது தாயுமானுரும்,

''பெற்றவட்கே தெரியும் அந்த வருத்தம்;பிள்ளை
பெருப்பேதை அறிவாளோ.''

என்று கூறுகின்ருர். இன்னும் விளக்கமான ஒருபாடல் இதோ.

''மணமாலை அருமையைப் புனைபவர்க ளேயறிவர்
மட்டிக் குரங் கறியுமோ?
மக்களுடை அருமையைப் பெற்றவர்க ளேயறிவர்
மலடிதான் அறிவ துண்டோ?
கணவருடை அருமையைக் கற்பான மாதறிவள்
கணிகையா னவள் அறிவளோ?
கருதுமொரு சந்தியின் பாண்டமென் பதைவரும்
களவான நாயறியு மோ?
குணமான கிளியருமை தனைவளர்த் தவரறிவர்
கொடியபூ னையும் அறியுமோ?
குலவுபெரி யோரருமை நல்லோர்க ளேயறிவர்

---

(முன் பக்கத்தொடர்ச்சி)

உலகம் உவப்ப வலனேர்பு திரிதரும்
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
ஓவற இமைக்கும் சேண்விளங் கவிரொளி
உறுநர் தாங்கிய மதனுடை நோன்தாள்

என்று நக்கீரர் போற்றுகின்ற முறையிலும், புள்ளிமயில், ஏறும் முருகன், காட்சி தருகின்ருன். அந்தக் காட்சியின் அருமையை மேலும் அநுபவிக்கின்ற சூரபதுமன் எண்ணுகின்ருன்.

(தொடரும்)

கொடுமுடர் தாமறிவ ரோ?
மணவாள நீயென்று குறவள்ளி பின்தொடர
வனமுடு தழுவும் அழகா!
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே!

என்று குன்றின் மேலிட்ட விளக்காக, குவலயம் போற்றும் "குமரேச சதகம்" கொளுத்தி (விளக்கி) நிற்பதைக் காண்கிறோம். ஒரு தாய் தன் மகனைப் பார்த்து, "கண்ணே; இம்மாலை வேளையில், அதுவும் திடீரென்று, காற்றும், மழையும் கலந்து வந்து மோதுகின்ற இக்காலத்தில், மூன்றுமைல் நடந்துசென்று, சினிமா பார்க்கப் புறப்படுகிறாயே. மேலும் நிலவு கூட இல்லையே. இன்றோ அமாவாசை. திரும்பி வரும் பொழுது வழியில் ஏதாவது பூச்சி பொட்டு (பேச்சு வழக்கு) கடித்தால் என்னவது இன்று வானமும் ஏதோ ஒரு மாதிரியாக இருக்கிறது. வேண்டாம். பிறகு என்றாவது ஒர்நாள் சென்று வா"என்கிறாள். அதற்கு மகன் "அம்மா. இன்றோடு இப்படம் கடைசி என்று விளம்பரத்தாள் ஒட்டியிருக்கிறார்கள். எனவே அவசியம் செல்லத் தான் போகிறேன். நல்லபடம், "தாய் சொல்லைத் தட்டாதே" என்பது. என்று கூறித்தாய்ச் சொல்லித் தட்டிச் செல்கிறான் அவளுடைய சேய். என் செய்வாள் பாவம். பெற்ற மனம் வேதனைப்படுகிறது. ஏன்? அவனைப் பெற்று, வளர்த்த அருமை, அவளுக்கல்லவா தெரியும். "ஐயிரு திங்களாகச் சுமந்து, நொந்து பெற்று, வளர்ப்பவளாயிற்றே. சென்றவன் நன்முறையில் வீடு வந்து சேரும் வரை அவள் உடலைவிட்டு உயிர் பிரிந்து தானே இருக்கும்! அதோடு நிற்கமாட்டாள். அவன் வரும் வரை பொறுப்பெல்லாம் ஆண்டவன்பால் போட்டுவிட்டு, "ஆபத்து ஏதும் இன்றி வரவேண்டும் இறைவா" என்று வேண்டிக் கொண்டே இருப்பாள்.

அவள் மகனைத் தொடர்ந்து அன்புக்கிரங்கி யருள்செய்கின்ற எம்பெருமானும், பின் செல்ல வேண்டும். இல்லையா இதோ ஒருபாடல்.

"சிவனே சிவனே சிவனேயென் பார்பின்
சிவனுமையா ளோடுந் திரிவன் — சிவனருளால்

பெற்றவிளங் கன்றைப் பிரியாமற் பின்னேடிச்
சுற்று பசுப்போற் றொடர்ந்து.'' (நீதிவெண்பா)

தன்மகனருமை உணர்ந்த தாய் அவன் வரவை எதிர்நோக்கிக் கண்ணுறக்க மின்றி உண்ணுமல் உட்கார்ந்து கிடக்கிருள். சென்று திரும்பிவந்து, தன்வீட்டு, வாயிற்படி யேறும் மகன் ''அம்மா''வென்றழைக்க, ''மகனே! வந்து விட்டாயா? ''வா வா'' என்று எதிர்நோக்கி ஓடுகிருள். ஓடி அவனை மார்போடுக் கட்டி யணைத்து, ''கண்ணே; விபத்தின்றி வந்தாயா? மழை வேறு வந்து விட்டதே. எங்கு தங்கினுய்?'' என்றெல்லாம் அன்பு கலந்தச் சொற்களாலே கேட்டுக்கொண்டே சோறு படைக்கிருள். அவனும் அகமகிழ் வோடு அம்மாவின் முகமலரைக் கண்டின்புற்றவாறே ''அவனன்றி ஓரணுவும் அசையாது அம்மா. ஒருகுறையும் வாராது. மனிதர்களை நம்பினுலும் தக்க சமயத்தில் கைவிட்டு விடுவார்கள். ஆனுல், கடவுளை நம்பினோர் கைவிடப் பட்டதாக இதுவரை எச்சரிதையும் இல்லையே. ஏனம்மா அச்சம்.'' என்று ஆதரவு காட்டித் தேற்றுகிருன், அம்மாவின் உள்ளத்தை.

அவனின் தாய் ''பெற்ற மனம் பித்தல்லவா'' என்று கூறி யமைகிருள். பின்னர் உறங்கச் சென்றதும் அவளுடைய மகன் விரைவில் உறங்கி விடுகிருன். சென்று திரிந்த களைப்பல்லவா? ஆனுல் தாய்மட்டும் உறக்கம் கொள்ளவில்லை. ஏன்? தன் மகனைப் பெற்று வளர்த்த காலங்களெல்லாம் தன் கண்முன்னே காட்சியளிக்கக் காண்கிருள். இப்போதும் வளர்த்துக் கொண்டு தான் இருக்கிருள். இருப்பினும் கடந்த காலத்தை நினைத்துக் கொள்ளுகிருள்.

அவனை முன்னுலே வளர்த்த அருமையும், அம்மகன் வளர்ந்து இப்போது தன் குடும்பத்தையே காப்பாற்றுகின்ற பெருமையும் அவள் நெஞ்சத்தை நெகிழச் செய்கின்றன. நினைத்து நினைத்துத் தன் உள்ளம் பூரித்து விம்முகின்ருள்.

''ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்ருேன் எனக்கேட்ட தாய்.''

என்கிருர் நமது எந்நாடும் போற்றும் செந்நாப் போதார். இதனுலன்ருே, ''தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை'' என்ருள்

நமது தண்தமிழ் மூதாட்டியான ஔவையும். இவ்வாறு மேற் கண்டவாற்ருன், பிள்ளையினுடைய அருமைப், பெருமைகளை எவ்வாறு அவனைப்பெற்ற தாய் உணர்ந்து இன்புறுகின்ருளோ, அதைப்போல ஆண்டவனின் அருமையும், அவர்தம் திருவடித் தாமரைகளின் பெருமையும், அறிந்து, அவனருளை; "நினைந்து, நினைந்து. உணர்ந்து, உணர்ந்து, நெகிழ்ந்து நெகிழ்ந்து, அன்பே நிறைந்து நிறைந்து, ஊற்றெழும் கண்ணீர், அதனுல் உடம்பு நனைந்து நனைந்து, வனைந்து வனைந்து" ஏத்தி, ஆராக் காதலுடன் பேரானந்த முற்று, தீராத வினைகளுந் தீரப்பெற்று, நேராக நின்று என்றும் இன்புறுவோர் அடியார்களே யாவர்.

இத்தகைய இறையடியார்களிலே ஒருவர், திருச்செந்தூர் என்னும் பதியின்கண் எழுந்தருளியிருக்கின்ற முருகப் பெருமானின் கோலத்தைத், திருவிழாக் காலத்தே கண்டு மகிழச் சென்ருர். எங்கு நோக்கினும் அடியவர் கூட்டமும், ஆங்காங்கே காவடிகள் ஆட்டமும், "அரகரா அரகரா", "முருகா, முருகா" என அவரவர் எழுப்பும் ஓசையும் கேட்கக் கேட்க, அடியவர்க்கோ அங்கமெலாம் பூரித்து விம்முகின்றது. அந்த நேரத்தில் மழையும பெய்யத் தொடங்குகின்றது. செந்திற் கந்தனைக் காண வந்தவாகள் எல்லோரும் இங்குமங்கும் ஓடியலையக் காண்கின்ருர் அடியவர், உடனே அவர் மேகத்தை நோக்கி,

"வந்துமழை பொழியும் வானேவெஞ் சூர்தடிந்த
கந்தர்திரு விழாக் காலத்தில் — தொந்தரையா
நீர்த்துளியை தூற்றிவிட னேர்த்தியல மாற்றிவிடு
கீர்த்திவரு நாட்டென்மொழி கேள்." (தனிப்பாடல்)

என்று கூறியதும், "ஈசனெதிர் நின்ருலும் ஈசனருள் பெற்றுயர்ந்த, நேசரெதிர் நிற்ப தரிதாமே," (நீதிவெண்பா) என்பதற்கு அஞ்சி, அடியர்தம் மொழிக்குக் கட்டுப் பட்டு முகிலும் மழை பெய்யாது நின்று விட்டது. பின்னர் அவ்வன்பர்தம் மகிழ்ச்சிக்கு அளவுண்டோ? எந்தையாம் கந்தவேளின் முன்னர், சென்னி மண்ணிலுற விழ்ந்தார். வணங்கிஞர். வாயார வாழ்த்திஞர். அப்படியும கடற்கரைக் கந்தனின் பால் கொண்ட காதல் தணிந்தபாடில்லை.

மயிலேறும் பெருமானின் தித்திக்கும் திரு அவதாரம் தம் சிந்தையிலே தேனுகப்பாய்கின்றது. சிவனுர்தம் திருவருளால் தோன்றிய தீப்பொறியாறும், திருவுருவாய்த் தோன்றி "அறு மீன்முலையுண்டு அழுது," சரவணப்பூம்பொய்கையிலே தவழ்ந்து விளையாடிய காட்சியும், பின்னர் அயில்வேல் விடுத்து, அசுரர்தம் ஆணவத்தைக் கெடுத்து, சுரர்களுக்கு நல்வாழ்வைக் கொடுத்து, தோகையம் மயிலேறி வாகைசூடிய எம்பெருமானின் மாட்சியும், மண்ணும் விண்ணும் ஒருங்கே மகிழ்ந்தேத்தச் செய்த, முருக வேளின் ஆட்சியும், அடியவர் எண்ண எண்ண இனிக்கின்றது. இனிக்கச் செய்வதோடு மட்டுமா! "சீர் கொண்ட தெய்வ வதனங்க ளாறுந் திகழ்கடப்பந், தார்கொண்ட பன்னிரு தோள்களுந் தாமரைத் தாள்களுமோர், கூர்கொண்ட வேலும் மயிலும் நற் கோழிக் கொடியும்," அவ்வடியவரின் அகக் கண்முன் தோன்று கின்றது. அவ்வளவில் அன்பருக்கோ அள வில்லா ஆனந்தம், பொங்கி வழிகின்றது. "மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்," "உய்யவென் னுள் ளத்துள் ஓங்கார மாய்நின்ற, மெய்யா, விமலா", என்றும், "ஐயா வெனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே" என்றும் பன்முறை ஓதிப்பணிந்து ஏத்துகின்றுர்.

அத்துடன் அமையாது, தன் சித்தத்தே எழுகின்ற முத் தானச் சொற்களால், நந்தமிழ்த் தேவனும் செந்திற் கந்தனின் செம்பொன் தண்டைக்காலின் சிறப்பையும் விளக்குகின்றுர். இதோ அவரியற்றிய அருந்தமிழ்ப் பாடல், ஒன்று.

"போற்றுவார் வல்விளையைப் போக்குமே, பூமலர்கொண்
டேற்றுவாரைக்கயிலை யேற்றுமே — தோற்றரிய
சந்தங்தங்குஞ் செஞ்சொற்சங்கம் பொங்குஞ் செந்திற்
கந்தன்செம் பொன்றண்டைக் கால்." (தனிப்பாடல்)

என்று அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவை, மெய்ஞ் ஞானச் சோதியை, சுடரை, ஆதியை, ஆறுமுகப் பெருமானின் திருவடித் தாமரையைச் சிறப்பிக்கின்றுர். உடனே இத்தகைய மலரடி, அடியவர்க் கருள் செய்யும் திருவடி, ஒருகாலத்தில், கல்லும் முள்ளும், கொல்லும் வனத்தில் வருந்த நடந்து தினைப் புனத்தைக் காவல் செய்த வள்ளி நாயகியைத் தேடிச் சென்ற

தாக அறிகின்றார். "இம்மைப்பிறப்பில் இருவாதனையகற்றும், செம்மை செறிந்த சேவடியும், ஒருகாலத்தில் வருந்த நடந்ததா? ஐயோ! எம்மால் தாங்கமுடியவில்லையே," என்று அகம் நெகிழ நின்று வருந்துகின்றார்.

"பெரியவர்தந் நோய்போற் பிறர்நோய்கண் டுள்ளம்
எரியின் இழுதாவர் என்க." (நன்னெறி)

என்றபடி சாதாரண மனிதர்படுந் துயரைக்கண்டே பெரியோர் இரங்குவர் என்றால், ஈரேழு பதினான்கு லோகத்தையும் காத்து இரட்சிக்கின்ற எம்பெருமானின், இணையிலாத் திருவடியின் துயர்கண்டு, அதனருமையுணர்ந்த அடியார்கள் வருந்தாமல் இருப்பரோ? இதோ, திருவிளையாடற் புராணத்தான் ஓர் அரிய வரலாற்றைக் காணுவோம். இராசசேகர பாண்டியன், எளிதிற் கற்க வியலாத ஓர்வகைக் கூத்தினைப் பயிலும்பொழுதில் தனது உடம்பின்கண் மிகவும் துன்பமாகிய நோய் எய்தப்பெற்று, இத் துன்பமானது நான்கு மறைகளாலும் அறியப்படாத பொருளாயும், ஞானவடிவாயும், வெள்ளி மன்றின்கண் ஆடி நின்றருளும், கூத்தப்பிரானுக்கும் உளதாமே என்னும் எண்ணத்தை மனதிற்கொண்டு, சொல்லற்கரிய தொல்புகழ் வாய்ந்த சிவனார் தம் திருவடியும் துன்பமுற, ஐயோ! அதனை அடியேன் அறிந்திருந்தும், இன்னும் என்உயிரை விடாமல்இருப்பது அறமாமோ? என்று எண்ணிக் கலங்குகின்றான்.

"கரியதா மரைக்கண் ணானுங்
கமலநான் முகனுங் காண்டற்
கரியதா ளொன்றே நோவ
வாற்றநா னிற்ப தந்தோ!
உரியதா மிதனைக் கற்று
வருத்தமுற் றோர்ந்து மீது
தெரியநா னிருப்ப தேயோ
வறனெனச் சிந்தை நோவான்."

—(கான்மாறியாடின படலம்)

இவ்வாறு, அருள் நிறைந்த ஆண்டவனின், "வேண்டுதல் வேண்டாமை இலான்" திருத் தாட்களின் அருமையினை, உணர்ந்து, பெருமைக்கோர் அந்தமிலா, செந்திலான் சேவடியும்

சிறுமையுற நடந்து சென்றதை அறிந்து, முருகப்பெருமானின் பால் ஆழ்ந்த அன்புடைய அவ்வடியவர் உருகாமல் இருப்பாரா? “நின் செயலால் நினைப்பதுவும் நிகழ்வதுவும் அன்றி, என் செயலால் ஆவதொன்றும் இல்லையப்பா” என, என்றும் தன் சிந்தையை, அச்சிங்கார மயிலோன்பால் ஒன்றும்படிச் செய்து “நான்” என்ற ஆணவம் அழிந்து நிற்பவரல்லவா அவ்வடியார்கள். “சஷ்டியை நோக்கச் சரவண பவனார், சிஷ்டருக்குதவும் செங்கதிர் வேலோன், பாதம் இரண்டில் பன்மணிச் சதங்கை, கீதம் பாடக் கிண்கிணியாட, மையல் நடஞ்செயும் மயில்வா கனனார்,” மையல் கொண்டு, மாணடி நோகத்தையலை (வள்ளியை) நோக்கி வனத்தில் சென்றது அவ்வடியாருள்ளத்தை வாட்டியது, ஏன்? அத்திருவடிக்கு வருத்தம் ஏற்படக் கூடாது, என்பதே அவ்வன்பரின் கோரிக்கை. ஆனால் ஏற்பட்டு விட்டதே என்று சிந்தை நைந்தார். நைந்த அவர் வெகு நயமாக, செந்தில் வாழ் கந்தப் பெருமானுக்கு அதை எடுத்தும் உரைக்கின்றார். இதோ, எவ்வளவு நயமாக, “எண்ணுந் தொறுந் தொறும், இன்பந் தரும் வகையான்” பகருகின்றார் பாருங்கள்.

“நோகாதோ வேலாநீ நோக்குமட மானுக்காப்
போகாவ ளந்தேடிப் போனக்கால் — வாகாத்
தினநினைந்திட் டுணவணங்கித் திரியுமன்பர்க் கருள்செயும்பொற்
கனகதண்டைச் சிறுசதங்கைக் கால்.” (தனிப்பாடல்)

என்ற செஞ்சொற் புனை செய்யுளான், நமது நெஞ்சக் கனகலையும் நெகிழ்ந்துருகச் செய்து விடுகின்றார். மேலும், என்றும் கூறுபுகழ் மிக்க ஆறுபடை வீடுகளுள் ஒன்றான, செந்திலம்பதி வாழும் நம் செவ்வேளின் பால், தம்சிந்தையை நிறுத்தி, இவ்வரிய இன்தமிழ் வெண்பாக்களை யாத்த, பொன்போன்ற அடியவர். தன்பெயரையும் குறியாது, “பற்று விடுவதற்குப் பற்று அற்றவன் சொன்ன முத்தி நெறியைப் பற்றிக் கொண்டவர் போலும்.” என்னே! இவர்தம் மாண்பு! “உருகும் மனம் உடையார் தமக்கு உறு நோய் அடையாவே” என்கிறார் ஊனசம் பந்தம் போக்கி யருளிய ஞானசம்பந்தர். “நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே, புக்கு நிற்கும் பொன்னார் சடைப் புண்ணியன்” என்கிறார் எப்பாரும் போற்றும், அப்பர் பெருமான்,

எனவே எவரும் செப்பரிய வகையான், நம்சிந்தையை, ஒப்பரிய நம் செந்திலாண்டவன் பால் நிறுத்தி, "முருகா" வென்று உருகா நின்று, "குமரகுருபரன்" அருள் பெற்று, இருள் சேர் இருவினையும் அற்று, "எந்நாளும் இன்பமே; துன்ப மில்லை" என உய்வோமாக!

"எந்நாளும் இன்பமே! துன்பம் இல்லை"
என்றநிலை நின்றேநன் வாழ்வை யேற்கும்
செந்நாளும் வாராதோ? செந்தின் மேவும்,
சிவனூர்தம் குருவே! எம் கோவே! நீயும்
இந்நாளே! இதுசமய(ம்) என்முன் வந்தே,
ஈடில்லா மாமணியே! இதயத் துள்ளே,
எந்நாளும் இன்பமுற உன்னைப் போற்றும்
ஏற்றமிகு நல்லன்பைத் தாராய்க் கண்ணே!

சரணம் முருகா

---

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# திருவாசக அநுபூதி உரை*

(சீகாழித் தாண்டவராயர் அவர்கள் இயற்றியது)

திருச்சிற்றம்பலம்

## புணர்ச்சிப் பத்து

இனி, புணர்ச்சிப் பத்தாவன:—

பொழிப்புரை யநுபவம்:— முற்பதிகத்தில் அருளிய இன்பப் பேருனதே பெரிதென நிட்டைகூடி இருத்தற்கடையாளம் வினவில், ஆருயிர் முன்போல் பரிபாக சின்னம் பலவுடன் தொழுது அபேத அத்துவிதக் காட்சியால் அதுவாய்ப் போவதே பரமுத்தி யடிமையென அருளியது.

திருப்பா, ஆசிரிய விருத்தமாகத் திருப்பெருந்துறையில் ஓதிய தெனக் காண்க.

436. இனி, திருவடி ஞானம் பெறுவது எக்காலமென்ற (தி.-ன.):—

சுடர்பொற் குன்றைத் தோளா
முத்தை வாளா தொழும்புகந்து
கடைபட் டேனை யாண்டுகொண்ட
கருணா லயனைக் கருமால்பிரமன்
தடைபட் டின்னுஞ் சாரமாட்டாத்
தன்னைத் தந்த வென்னாரமுதைப்
புடைபட் டிருப்ப தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே.

(இ-ள்). குஞ்சித்த சேவடியைக் கும்பிட்டே இருப்பவர் களான சீரடியார்களே! கேண்மோ? நமது பரமசிவனை, 'நலஞ் சுடரே' யெனவும், 'ஞானத் திருவருட் சொன்னமலையே' எனவும்,

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

* இவ்வரிய நூலைப் பதிப்பித்த சென்னை-திருவான்மியூர், மகா மகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் நூல் நிலையத் தாரின் அனுமதிபெற்று இது வெளியிடப் பெறுகின்றது. இதன் விலை ரூ. 18/- மேடி நூல் நிலையத்திலிடைக்கும். 20% கழிவு உண்டு.

# கடன்

வித்துவான். திரு. சிவ. சோமசுந்தரம் அவர்கள்,
காஞ்சிபுரம்.

உலகில் தோன்றிய உயிர்களனைத்தும் தத்தம் கடமையை உணர்ந்து செயலாற்றுதலையே கடனென்பர் சான்றோர். "கடன்" என்னும் சொல்லின் பொருள் கடமை என்பதாகும். பொருளைப் பெற்று பிறகு அதனைத்திருப்பித் தருதலையும் கடனென்பர். பொதுவாக இலக்கியங்கள் பலவற்றிலும் கடமை என்ற பொருளிலேயே "கடன்" என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளனர்.

ஓரறிவுயிர் முதல் ஆறறிவு படைத்த மனிதர் வரையிலும் பிரம்மா தோற்றுவிக்கிறார். அனைத்துயிரும் இறைவனை வேண்டினும் வேண்டா தொழியினும் ஈடிணையற்ற இறைவன் தன் கடனாக உயிர்களைக் காப்பாற்றுகின்றான் என அப்பர்,

"நங்கடம்பனைப், பெற்றவள், பங்கினன்
தென் கடம்பைத் திருக்கரக், கோயிலான்

---

(முன் பக்கத்தொடர்ச்சி)

'கற்பனை வழிக்ககப்படாத திருவருள்முத்தே,'எனவும்,தீவண்ணர் திறமொருக் காலாகிலும் பேசாது தேகாதி பிரபஞ்சப் பணியாளனாய் யாவரினும் கடையன்ன என்னைத் திருவருட் பணிக்கடிமையாக அருளும் கருணாநிதித் தெய்வமே' எனவும்; மெய்ஞ்ஞானத் திருவடியைக் காணவேண்டு மென்று தற்சுட்டால் முயல்வதான அரிபிரமன் இன்னமும் காணாது சம்சயமுற்று நிற்பதான திருவடியை அடியேற் கருள்வதான எனதுயிரமிர்த வின்ப வன்பே யுருவானவனே (எனவும் கூவி), அச்சிவசந்நிதானத்திலே அடிமைப் பணிக் காளாவதெக்காலமோ? கற்பனை கடந்த சோதிமணியை அபேத வத்துவிதமாகப் புணர்ந்து,— என வருளியதைக் காண்க.

தன் கடன், அடியேனையும் தாங்குதல்
என் கடன், பணிசெய்து, கிடப்பதே”

என்னும் பாடலின் மூலம் இறைவனின் கடமையைத் தெளிவு படுத்துகின்றார்.

இவ்வுலகம் அழியாது நிலைபெற்று இருப்பதற்கு கடலுண் மாய்ந்த இளம்பெருவழுதி ஓர் ஒளியை நம்முன் நிறுத்துகின்றார். அஃது யாதெனின் சான்றோர், புகழெனின் உயிரும் கொடுப்பர்; பழியெனின் இவ்வுலகையே ஈவதாக இருந்தாலும் பெறாது தமக் கென முயன்று வாழாமல் பிறர்க்கெனவே வாழ்வர் எனக் கூறு கின்றார். இந்நீர்மைத்தான சான்றோர்களின் கடன் பற்றி பொய்யில் புலவன்,

“நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்
குப்பாதல் சான்றோர் கடன்”

என்னும் குறள் வெண்பாவின் மூலம் தெளிவு படுத்துகின்றார். அதாவது நட்பிற்கு நல்ல உறுப்பாவது நண்பர் உரிமையைப் பாராட்டுவதேயாகும். அந்த உரிமைச் செயலுக்கு உடன் பட்ட வராதல் சான்றோர் கடமையாகும் எனக்கூறுகின்றார்.

நம்மக்களை ஈன்று போற்றி வளர்த்து வெளியே அனுப் புதல் தாயின் கடமை என்றும், தந்தையின் கடமை அம்மக் களைச் சான்றோன் ஆக்குதல் என்றும், போர்க் களத்தில் சென்று திறம்பட போர் புரிய வேல்வடித்துக் கொடுப்பது கொல்லன் கடமை என்றும், அத்தகைய வேல் கொண்டு போர்ப்பயிற்சியை அளித்தல் வேந்தன் கடமையென்றும், வாளினைப் போர்க் களத்தில் சுற்றி அஞ்சாது போர்செய்து மாற்றான் களிற்றைக் கொன்று மீண்டு வருதல் காளையாகிய மகனின் கடமையாகும் என்று பொன்முடியார் என்னும் பெண்பாற்புலவர்,

ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே!
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே!
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே.
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே!
ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே!

என்னும் புறநானூற்றுப் பாடல் மூலம் விளக்கிக் கூறியுள்ளார்,

மாற்ருேடு போர் செய்து வெற்றி பெறுதல் நன் மகனின் கடமையென்று புறநானூறு கூறுகின்றது, ஆனல் நாலடியாரில் இவ்வுலக வாழ்வை நீத்து விண்ணுலகை அடைவதற்கு முன் இல்லெனது தன்னை வந்தடைந்தவர்கட்கு வேனிற் காலத்தில் நிழலைத் தரக்கூடிய மரம் போல அவர்களுக்கு உதவி செய்து அவர்களுடைய துன்பத்தை நீக்கி பழுத்த மரம் பிறர் நன்மையடையும்படி பழங்களைக் கொடுத்து தான் வருந்துதல் போல நல்லாண் மகன் தான் துன்பமடைந்த காலத்தும் தனக்கெனவாழாது பிறர் நலனே தன்னலம் எனப்போற்றி வாழவேண்டுமென அறிகிருேம்.

ஒரு நாடு பசி, பட்டினி நீங்கிப் பொன்னுடாகத்திகழ வேண்டுமெனின் அரசன் நன்முறையில் ஆட்சி செய்ய வேண்டும். அரசன் அறியாதவனுக இருந்தாலும் அமைச்சன் அவனுக்கு உறுதியானவற்றை எடுத்துக் கூறுதல் அவன் கடமையாகும் என்று முப்பாலில் தெய்வப்புலவர் கூறுகின்ருர்.

உலகவுயிர்களைக் காப்பது நெல்லும் நீரும் மட்டுமன்று. மன்னனின் முறையான காவற்சிறப்பாலேயே இவ்வுலகம் நிலை பெறுவதனுல் அவனே உலகிற்கு உயிர் ஆவான். அதனுல் அம்மக்களுக்கு யாதொரு தீங்கும் ஏற்படாது பேணி நடப்பதே வேந்தனின் கடமையாகும் என

"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்
அதனுல் யானுயிர் என்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே."

என்னும் புறநானூற்றுப் பாடலால் அறியலாம்.

நூல்களில் உள்ள நுட்பமாகிய நற்பொருளைக் கொள்ளுதலும் நூல்களுக்குத் தகாத பயனற்ற சொற்களைப் பிறர் விரும்பினுலும் சொல்லாதொழிதலும், நல்ல சொற்களைக் கீழ்மைத் தன்மை அல்லாதாரிடத்து சொல்லுதலும் ஆகிய இம்மூன்றும் கற்றறிந்தார் மேற்கொண்ட கடமையாகும் எனத் திரிகடுகம் என்னும் நூலினுல் அறியலாம். மேலும் அந்நூலில் கற்புடைய பெண் மேற்கொண்ட கடமைகளை,

"நல்விருந் தோம்பலின் நட்டாளாம் வைகலும்
இல்புறஞ் செய்தலின் ஈன்றதாய் — தொல்குடியின்
மக்கள் பெறலின் மனைக் கிழத்தீ இம்மூன்றும்
கற்புடையாள் பூண்ட கடன்,"

என்னும் பாடலினுல் அறியலாம்.

"கடன் படுவதை என்வாழ்க்கையில் நான் என்றுமே மேற்கொண்டதில்லை, அத்துடன் கடன் படுவதை எப்பொழுதுமே வெறுத்தும் இருக்கிறேன்" என்று மகாத்மா காந்தியடிகள் கூறியுள்ளார்.

"பயனை எதிர்பாராது உன் கடமையைச் செய்" என்று கீதை போதிக்கின்றது. அம்முறைப்புடி வாழ்ந்தால் தாம் பிறருக்குக் கடப்பாடுடையவர்களாய் வாழாமல் நம் அன்ருடக் கடன்களைச் செய்து நன்முறையில் வாழ்ந்து நற்பேறெய்தலாம்.

---

## உலகமெல்லாம் நீயே!

பல்லவி

உலகமெல்லாம் நீயே! — தாயே! — பார் (உலக)
தமிழ்த்தாயே! (உலக)

அனுபல்லவி

இயலிசை நாடக மெல்லாம் நீயே!
கயல்வில் புலியொடு ஆளுவாய் தாயே! (உலக)

சரணம்

செந்தமிழ் யாழ்தன்னைத் தென்றலிசை மீட்டக்
கன்னித் தமிழாலுன்னைக் கடலும்புகழ்ந் தேத்த
இன்னிசைக் கவியாலே உன்னடிதொழு மாந்தர்
எண்ணும்வர மெல்லா மீவதுன்கட னன்றோ (உலக)

புலவர் திரு. வே. அரசு
*தமிழாசிரியர், அரசினர் உயர்நிலைப்பள்ளி,*
*எளச்சிபாளையம், சேலம் மாவட்டம்.*

## திருப்பேரூரில் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவு நாள் அன்னம்பாலிப்பு நிதி ரூ. 3,000-/



சுந்தரமூர்த்திசுவாமிகளால் ஊர்த்தொகையில் 'பேருருறை வாய் பட்டிப் பெருமான் பிறவாநெறியானே', என்று போற்றப் பெற்றதும்,

சிதம்பரத்தில் பாடிய பதிகத்தில் சுந்தரர் இறைவன் கனக சபையில் நடனம் செய்யும் கோலத்தைத் திருப்பேரூரில் கண்டதாக 'மடித்தாடுமடிமக்களின்றியே' என்ற பதிகத்தில், 'மிகொங்கில் அணிகாஞ்சிவாய்ப் பேருரர் பெருமானைப் புலியூர்ச் சிற்றம்பலத்தே பெற்றுமன்றே' எனறு 7-ம் திருமுறையில் பாடிய சிறப்புடையதும்,

இச்செய்தி "நித்தனுர் தில்லைமன்றுள் நின்றுடல் நீடிய கோலம் நேர்காட்டக் கைத்தலங்குவித்துக் கண்களானந்தக் கலுழிநீர் பொழியரக்கண்டார்" என்றும், 'பொன்மணி மன்றுள் எடுத்த சேவடியார் புரிநடம் கும்பிடப்பெற்ருல், என்னினிப் புறம் போந்தெய்துவது" என்றும் 12-ம் திருமுறையிலும் குறிக் கப்பெற்றதும்,

"உரைத்தநாற் பயனுட் பெரும்பயனுய
 தொள்ளிய வீடதஃதுறலால்
தரைத்தலைப் பேருர் என்மர்கள் சிலர், எத்
 தலத்திலும் சாற்றுநாற் பயனும்
நிரைத்தலிற் பேருர் என்மர்கள் பலரே,
 நீடிய ஆதிமா நகரை
இரைத்தெழு கடல்போல் வளத்திலும் பேருர்
 என்மர்கள் பற்பலா ரிரரே"

என்று கச்சியப்ப முனிவரால் பேரூர்ப் புராணத்தில் புகழப் பெறு வதும்,

காவிரியின் கிளைநதியாகிய நொய்யல் எனப் பெறும் காஞ்சிநதிக்கரையில் இருப்பதும்,

மேலைச் சிதம்பரம் என்று குறிக்கப்பெறுவதும் ஆன திருப் பேரூர் என்னும் தலத்தில் ஆண்டுதோறும் ஸ்ரீ ஆதி குமர

குருபர சுவாமிகள் அவர்களின் நினைவுநாளில் அந்தணர் அருந் தவர் ஏழைகளுக்கு அன்னம்பாலித்தற் பொருட்டுத் திருப்பனந் தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இத்தருமம் நிறுவப்பெற்றது. இது 'திருப்பேரூரில் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவு நாள் அன்னம்பாலிப்பு நிதி' எனப்பெறும்.

2. இதற்குரிய முதற்பொருள் ரூ. 3,000/- ரூபா மூவா யிரம். இது ஆண்டொன்றுக்கு $5\frac{1}{2}$/% வட்டி தரக்கூடிய சென்னை அரசாங்க கடன் பத்திரங்களில்/ Madras State Loan 1978/ முதலீடு செய்யப் பெற்றுள்ளது. கடன்பத்திரம் எண் எம். எஸ். 576-ரூ 1000/- எம். எஸ். 577-ரூ. 1000/- எம். எஸ். 490-ரூ. 1000/- ஆக ரூ. 3000/- இது நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலிக்கப்பெறும்.

3. நம்மால் மூலதனங்கள் நிறுவப்பெற்று ஆண்டுதோறும்

| | | |
|---|---|---|
| இராமேசுவரம் | ஆக்கூர் | கன்னியாகுமரி |
| மாயூரம் | திருச்செந்தூர் | வைத்தீசுவரன்கோயில் |
| ஸ்ரீவைகுண்டம் | சீர்காழி | திருநெல்வேலி |
| ஆச்சாள்புரம் | பழையபாவநாசம் | சிதம்பரம் |
| திருக்குற்றாலம் | திருப்பாதிரிப்புலியூர் | உத்தரகோசமங்கை |
| விருத்தாசலம் | திருப்பெருந்துறை | திருக்கோவலூர் |
| திருப்பத்தூர் | திருவண்ணாமலை | மதுரை |
| திருமாகறல் | பழனி | காஞ்சிபுரம் |
| விராலிமலை | திருக்கழுக்குன்றம் | திருப்பாண்டிக்கொடுமுடி |
| சென்னை | திருவானைக்கா | திருவொற்றியூர் |
| திருவையாறு | வடதிருவாலங்காடு | சுவாமிமலை |
| திருத்தணிகை | திருவிடைமருதூர் | காளஹஸ்தி |
| திருப்பனந்தாள் | பிரயாகை | வேதாரண்யம் |
| வாரணசி | திருப்புகலூர் | டில்லி |
| திருவாரூர் | ஹரத்துவார் | திருநாகைக்காரோணம் |
| ரிஷிகேசம் | திருநள்ளாறு | திருக்கேதாரம். |

காவிரிப்பூம்பட்டினம், திருநணு/ பவானி/ ஆகிய50 தலங்களில் அன்னம் பாலிப்பு நிகழ்த்துதல் போல இம் முதற் பொருளி னின்று ஆண்டு தோறும் கிடைக்கும் வட்டித் தொகையில் இத்

தருமத்தை நடத்துவதற்குரிய நிர்வாகச் செலவுகள் போக எஞ்சியுள்ள வட்டித் தொகை முழுதும் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் சிவப்பேறு எய்திய திருநாளாகிய வைகாசி அமரபக்ஷம் திருதியை நாளில் கொங்கு நாட்டில் கோவைக்கு அருகில் உள்ள திருப்பேரூர் என்னும் திருத்தலத்தில் அந்தணர், அருந்தவர் ஏழைகளுக்கு அன்னம் பாலிக்கச் செலவிடப்பெறும்.

4. ஆண்டு தோறும் வரப்பெறும் வட்டி வரவுக்கேற்பவும் பொருள்களின் காலவிலைக்கு ஏற்பவும் நம்மால் தயாரிக்கப் பெறும் திட்ட ஜாப்தாவின்படி அன்னம் பாலிப்பு நடத்தப் பெறும்.

5. இத்தருமம் வேறு எம்முறையிலும் மாற்றியமைக்கப் பெறமாட்டாது. இம்முதற்பொருள் நம்பேரிலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்துவரும். இம்முதற் பொருள் அரசினரால் திரும்பியளிக்கப்பெறின் மீண்டும் அதிக வட்டி வரும் அரசியல் கடன்தாள்களிலோ நிலையான முதலீடுகளிலோ முதலீடு செய்யப்பெறும்.

Tirupanandal
Dated 22-6-1967 } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran.*

---

Registered at Tiruvadamarudhur Sub Registrar's office on 23-6-67 as No. 25 of 1967 of Book 4 volume 54 pages 37 to 39.



# திருமுறை வெளியீடுகள்

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை (அச்சில்) | | |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | 3 | 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் ... | 3 | 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம் மட்டும் புதிய பதிப்பு) | 2 | 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் .. ... | 2 | 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் ... ... | 1 | 30 |
| 7* | திருவாசகம் (புதிய பதிப்பு) ... | 0 | 65 |
| 8 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிச்செய்த காசிக் கலம்பகம் மூலமும் அரும்பதக்குறிப்பும் ... | 0 | 40 |
| 9 | .. சிதம்பர மும்மணிக்கோவை மூலமும் அரும்பதக்குறிப்பும் ... | 0 | 20 |
| 10 | ஒன்பதாம் திருமுறை–திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் தெளிவுரை ... | 1 | 50 |
| 11 | .. .. மூலம் மட்டும் ... | 0 | 56 |
| 12* | பதினோராந் திருமுறை (புதிய பதிப்பு) .. ... | 1 | 50 |
| 13* | பெரியபுராணம் (மூலம் மட்டும்) ... | 3 | 00 |
| 14 | பெரியபுராணம் (உரை நடை) ... | 2 | 00 |
| 15 | திருத்தொண்டர் புராணச்சாரம் ... | 0 | 40 |
| 16* | அகத்தியர் தேவாரத் திரட்டு ... | 0 | 36 |
| 17 | திருவிளையாடற் புராணம் (மூலம் மட்டும்) ... | 3 | 00 |
| 18 | திருவிளையாடற்புராணம் உரை நடை ... | 2 | 25 |
| 19 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம் மட்டும்) .. | 1 | 75 |
| 20 | கந்தபுராணம்–முதல் மூன்று காண்டங்கள் (மூலம்மட்டும்) | 2 | 75 |
| 21 | .. யுத்த தேவ காண்டம் .. | 2 | 00 |
| 22 | .. தக்ஷகாண்டம் .. | 1 | 50 |
| 23 | கந்தபுராண உரைநடை .. ... | 3 | 00 |
| 24 | திருக்குறள் அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | 1 | 50 |
| 25 | திருக்குறள்–பொருட்பால் .. | 2 | 50 |
| 26 | திருக்குறள் – காமத்துப்பால் .. ஷை 24, 25, 26 திருக்குறள் 3புத்தகமும் | 4 | 00 |
| 27 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் (அச்சில்) | | |
| 28 | தாயுமானசுவாமிகள் பாடல் குறிப்புரையுடன் ... | 1 | 25 |
| 29 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) ... | 0 | 25 |
| 30 | திருக்கைலாய ஞானவுலா–உரையுடன் ... | 0 | 50 |
| 31 | கந்தர் அலங்காரம் குறிப்புரையுடன் .. | 0 | 25 |
| 32 | கந்தரனுபூதி மூலம் (அச்சில்) | | |
| 33 | கந்தரனுபூதி தெளிவுரை ... | 0 | 36 |
| 34 | கந்தர்கலி வெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழிபெயர்ப்புகளுடன் (அச்சில்) | | |
| 35 | கந்தர்கலி வெண்பா மூலம் மட்டும் ... | 0 | 10 |
| 36 | கந்தர்கலி வெண்பா மூலமும் உரையும் (அச்சில்) | | |
| 37 | நீதிநெறி விளக்கம் – ஆங்கிலமும், ஹிந்தியும் | 0 | 60 |
| 38 | நீதிநெறி விளக்கம் – மூலம் | 0 | 10 |
| 39 | நீதிநெறி விளக்கமும் நன்னெறியும்–மூலம் ... | 0 | 15 |

Registered With the Registrar of Newaspapers for India
Under No. R. No. 1485/57.



| | | |
|---|---|---|
| 41 | திருக்குறள்-பொருட்பால்-பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் ... | 0 13 |
| 42 | திருச்செந்தூர்க் கந்தர்கலிவெண்பா-மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்-மதுரைக்கலம்பகம்-நீதிநெறி விளக்கம்-மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை மதுரை மீனாட்சியம்மை குறம் ... | 2 75 |
| 43 | திருவாரூர் நான்மணிமாலை-முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் ... | 1 25 |
| 44 | சிதம்பர மும்மணிக்கோவை-சிதம்பரச்செய்யுட் கோவை தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | 1 00 |
| 45 | பண்டார மும்மணிக்கோவை-காசிக்கலம்பகம் சகலகலாவல்லி மாலை ... | 1 00 |
| 46 | சிதம்பரச் செய்யுட்கோவை ... | 0 75 |
| 47 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் ... | 0 50 |
| 48 | திருவருட்பயன் மூலம் இந்தி, ஆங்கில மொழிபெயர்ப்புடன் | 1 00 |
| 49 | திருக்கயிலைத் திருமுறை ... | 0 37 |
| 50 | திருக்கடலூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் ... | 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை ... | 0 15 |
| 52 | திருக்குறள்-உரைக்கொத்து-அறத்துப்பால் 3-ம் பதிப்பு | 1 37 |
| 53 | ஷை ஷை பொருட்பால் 2-ம் பதிப்பு | 2 75 |
| 54 | இந்து நீதி நூல்கள் ... | 0 10 |
| 55 | ஸ்ரீ சயிலம் ... | 0 10 |
| 56 | திருவாசகம் குறிப்புரையுடன் (விஷய சூசனத்துடன்) பழைய பதிப்பு ... | 1 50 |
| 57 | திருவாரூர்-திருப்பனுவல்கள் ... | 0 10 |
| 58 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி ... | 0 10 |
| 59 | பழமொழித்திருமுறை ... | 0 25 |
| 60 | திருவாரூர் நான்மணிமாலை ... | 0 50 |
| 61 | Hymns and Proverbs ... | 0 30 |
| 62 | அப்பர்விழா வெளியீடு ... | 0 25 |
| 63 | நவக்கிரகமாண்பு ... | 0 25 |
| 64 | குமரகுருபரர் வரலாறும், அற்புதத்தேவாரத் திரட்டும் ... | 0 30 |

மேலே கண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்.

"தியாகராஜ விலாசம்" 53. பிள்ளையார் கோயில்தெரு.
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை-5

குறிப்பு:- ● இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கோத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்

அச்சிட்டது:- குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம்-67.